**திருநெல்லை**

இணைய வழி ஆன்மீகத் திங்களிதழ்

சோபகிருது – பங்குனி

2024–ஏப்ரல்

இணையவழி மலர் 1 – இதழ் 8

(தனிச் சுற்றுக்கு மட்டும்)

சிறப்பாசிரியர்

பொற்கிழிக் கவிஞர்

சொ.சொ.மீ. சுந்தரம்

ஆலோசகர்

தமிழாகரர் தெ. முருகசாமி

ஆசிரியர் குழு

வெளியிடுபவர்

சீர் வளர் சீர்

நாராயண ஞான தேசிக சுவாமிகள்

கோவிலூர் மடாலயம்

கோவிலூர் 630 307

மானகிரி (அஞ்சல்)

(வழி) காரைக்குடி

சிவகங்கை மாவட்டம்

 04565–236846

 94433 37011

இணைய அச்சாக்கம்

திரு. கணேஷ்

ஸ்ரீபெரும்புதூர்

# பொருளடக்கம்

பக்கம்

# ஆசியுரை



சீர் வளர் சீர்

**நாராயண ஞான தேசிக சுவாமிகள்**

கோவிலூர் ஆதினகர்த்தர்

கோவிலூர் மடாலயம் பல அரிய பணிகளைத் தொடர்ந்து செய்து வருகின்றது. தமிழில் வேதாந்த நூல்களை வெளியிட்டு அதனை பாடமுறையாகவும் வகுத்துத் தந்துள்ளது. மேலும் நம் மடாலயம் 40,000 நூல்களுக்கு மேல் உள்ள அரிய நூலகம் ஒன்றையும் சிறப்புடன் பராமரித்து வருகிறது. இந்நூலகத்தில் பல உன்னத நூல்கள் சேமிக்கப் பெற்றுள்ளன. இந்நூலகத்தில் உள்ள நூல்களை இணைய வழியாகவும் படிக்க நாள்தோறும் பதிவேற்றம் செய்யும் பணி நடைபெற்று வருகிறது. இவ்வகையில் கோவிலூர் மடாலய நூலகம் தற்கால இணைய உலகிற்கு ஏற்ப நவீனமயமாகி மக்களைச் சென்று சேர்ந்துவருகிறது. நூலகத்திற்கென சிறந்த பணியாளர்கள் நியமிக்கப்பெற்று வளம் பெற்று வருகிறது.

நமது இணைய வழி நூலகம் பலரையும் கவர்ந்திருக்கிறது. அண்மையில் அமுதசுரபி பத்திரிகை ஆசிரியர் திரு திருப்பூர் கிருஷ்ணன் அவர்கள் சில நாட்கள் நம் மடத்தில் தங்கி யிருந்தார்கள். அப்போது அவர்கள் நம் நூலகத்தையும், இணைய வழி நூலகத்தையும் பார்க்கும் வாய்ப்பு கிடைத்தது. "நூலகத்தின் பயனே அதில் உள்ள நூல்களைப் பலருக்கும் பயன்படுமாறு செய்வது தான்".அதை நம் நூலகம் சிறப்பாகச் செய்வதாக திருப்பூர் கிருஷ்ணன் பாராட்டினார்.

நாம் இணைய நூலகத்தை உலக நாடுகள் பலவற்றில் உள்ள அன்பர்கள் பார்த்துப் பயன் பெறும் செய்திகள் நமக்கு வந்து சேர்கின்றன. முனைவர் சபா அருணாசலம் போன்றவர்கள் இன்னும் ஒரு படி மேலே போய் அவர்கள் கூட்டங்களில் பேசுவதற்கு இந்த நூல்களில் இருந்து மேற்கோள்களை உடனடியாக எடுத்துக் கொள்ள முடிகின்றது

என்றார். பல அரிய செய்திகள் பழைய நூல்களில் இருந்துப் பெற்று மக்களுக்குச் சொல்லமுடிகின்றது என்றும் அவர் சொன்னார்.

தொழிலதிபர் திரு ஏ.சி முத்தையா அவர்களும் திருமதி தேவகி முத்தையா அவர்களும் அண்மையில் காஞ்சி மடத்தில் சங்கராச்சாரிய சுவாமிகளைச் சந்தித்தபோது கோவிலூர் மடாலயத்தின் இணைய நூலகத்தைப் பற்றிய உரையாடல் நிகழ்ந்துள்ளது. சங்கர மடத்தின் நூலகத்தையும், கோவிலூர் மடாலயத்தின் நூலகத்தையும் இணைத்து நல்ல நூல்களை மக்களுக்கு வழங்கவேண்டும் என்றும், அதற்கு ஆவனவற்றைச் செய்ய வேண்டும் என்றும் காஞ்சி மடத்தின் வாயிலாகத் தெரிவிக்கப்பெற்றுள்ளது. இப்பணியும் விரைவில் நடந்தேறும்.

இத்தகைய கருத்துக்களால், பல அரிதான நூல்கள் இப்போது அச்சில் இல்லை என்பதும் அந்த நூல்கள் கிடைக்கும் படி செய்தால் அது பலருக்கும் பயன்படும் என்றும் தெளிவாக தெரிகிறது.

## அரிய நூல்கள் மறுவெளியீடு

நூல்களை இணைய வழியில் வெளி யிடுவதற்குப் பல முறைகள் உள்ளன. தற்போது நூல்களின் பக்கங்களை மின்வருடி முறையில் அதாவது ஸ்கேனிங் முறையில் இணையவழியில் பதிவேற்றம் செய்து வருகிறோம். இதற்காக தனியாக ஸ்கேனர்கள் வாங்கப்பெற்று நாள் ஒன்றுக்கு ஆயிரம் பக்கங்கள் பதிவேற்றம் செய்வது என்று பணி நடைபெற்று வருகிறது. ஆனால் அந்த நூல்கள் எந்த நிலையில் இருந்தனவோ அந்த நிலையிலேயே பதிவேற்றம் செய்ய இயலும். மிகப் பழைய நூல்கள் பக்கங்கள் பழுப்பேறியும் மிகச் சிறிய எழுத்துக்களாகவும் இருப்பதால் அவற்றைப் படிப்பது எளிதாக இல்லை.

இதன் அடுத்த நிலை OCR என்ற, நூல்களைத் திருத்தத் தக்க வகையில் பதிவேற்றம் செய்வது. இதனைச் செய்யும் முயற்சியும் தற்போது மேற்கொள்ளப் பெற்று வரப்பெறுகின்றது. இதற்கு அமெரிக்காவில் வாழும் திரு இளங்கோ ராமநாதன் அவர்கள் பயிற்சி அளித்தார்கள். அதன் மூலம் சுமார் 95% துல்லியத்துடன் இந்த அரிய நூல்களைப் புத்தாக்கம் செய்ய இயலுகிறது . இதன் மூலம், எளிதாகப் படிக்கும் படி, நூல்களை மென் பதிப்பாக வெளியிடுவது இப்போது சாத்தியமாகி உள்ளது.

இணைய வழியில் உள்ள புத்தகத்தை கணினியில் மட்டும்தான் படிக்க முடியும் என்பதில்லை. அதனை அச்சுவடிவிலும் வடிவமைத்து, படிக்க இயலும். இதற்கு சில அச்சகங்களை அணுகி உள்ளோம். அவர்கள் ஒரே ஒரு நகல் மட்டும் தான் வேண்டும் என்றாலும், ஒரு பக்கத்திற்கு சுமார்

70 முதல் 75 காசுகள் என்ற வீதத்தில் புத்தகத்தை அச்சிட்டுத் தர தயாராக உள்ளார்கள். ஆகவே மென் நூலாக வேண்டுபவர்கள் நம் இணைய நூலகத்தில் OCR செய்த நூல்களை தரவிறக்கம் செய்து கொள்ளலாம் அச்சுப்பிரதியாக வேண்டுபவர்கள் எங்களைத் தொடர்பு கொண்டால் அந்த நூலுக்கான அச்சுக் கட்டணத்தைச் செலுத்தினால் அச்சிட்ட நூலை அவர்களுக்கு நாங்கள் அனுப்பி வைக்கவும் தயாராக இருக்கிறோம். இதன்வழி எப்போதும் போல் நூல்வடிவிலும் படிக்கலாம்.

## பிற நூலகங்களுடன் ஒத்துழைப்பு:

நம் நூலகத்தை மட்டும் இணைய வழி நூலகமாக மாற்றினால் போதாது என்ற எண்ணம் நமக்கு வந்தது. எங்கெல்லாம் அரிய புத்தகங்கள் உள்ளதோ அங்கெல்லாம் சென்று அப்புத்தகங்களைப் பெற்று அவற்றை இணைய வழியில் கொண்டு வந்து மக்களுக்குத் தரவேண்டும் விரும்பினோம்.

இதன் அடிப்படையில் காரைக்குடியில் அமைந்துள்ள இலக்கிய அமைப்புகளான கம்பன் அறநிலை, இந்து மதாபிமான சங்கம் ஆகியவற்றில் சிறந்த நூல்கள் சேமிப்பில் உள்ளன.அவற்றையும் பொதுமக்கள் பயன்பாட்டிற்குக் கொண்டுவந்தால் நன்றாக இருக்குமே என்று கம்பன் அறநிலைக்கு வேண்டுகோள் விடுத்தோம். அதனை ஏற்று அதன் தலைவர் திரு பெரியணன் அவர்களும் பொருளாளர் திரு வீர.சுப்பிரமணியன் அவர்களும் உடனே ஒப்புதல் தெரிவித்தார்கள். கம்பன் அறநிலை நுலகத்தில் இருந்து 25–25 புத்தகங்களாக வந்து சேர்ந்து அவை தற்போது கோவிலூர் மடாலய இணைய நூலகத்தில் பதிவேற்றம் பெற்று வருகின்றன. இந்து மதாபிமான சங்கமும் விரைவில் ஒப்புதல் அளிக்க உள்ளனர்.

திருச்சியில் வாழ்ந்த, பேராசிரியர் இராதாக்கிருட்டிணன் அவர்களின் புதல்வர் திரு இரா.மாது அவர்களும் அவர்களிடம் உள்ள நூல்களின் பட்டியலை அனுப்ப உள்ளார்கள். அந்தப் பட்டியலில் நம்மிடம் இல்லாத அரிய நூல்களைப் பெற்றுப் பதிவேற்றம் செய்ய உள்ளோம். இதே போல் வேறு யாரிடமும் அரிய நூல்கள் இருந்தால் நம்மைத் தொடர்பு கொண்டால் அப்புத்தகங்களும் பதிவேற்றம் செய்யப்படும். இணையப் பதிவேற்றம் முடிந்தபின் நூல்கள் உரியமுறையில் திருப்பி அளிக்கப்படும்.

நம் இணையவழி நூலகம் வா யிலாக, அறிவும் ஆன்மீகமும் வளர நம் ஆசிகள். புதிதாய்ப் பிறக்கும் இப்புத்தாண்டில் இணைய வழியாக அரும்பெரும் பணியைக் கோவிலூர் மடாலயம் செய்துவர இறையருள் வழிகாட்டியுள்ளது. அனைவருக்கும் இனிய தமிழ்ப் புத்தாண்டு வாழ்த்துக்கள்.

## கோவிலூரின் கதை - 4

# சீர் வளர் சீர் இராமசாமி ஞான தேசிகர் சுவாமிகள்




சீர் வளர் சீர்
இராமசாமி ஞான தேசிகர் சுவாமிகள்
(நான்காவது பட்டம்) (1876 – 1883)



- முனைவர் மு.பழனியப்பன்
தமிழ்த்துறைத் தலைவர்,
அரசு கலை மற்றும் அறிவியல் கல்லூரி,
திருவாடானை

கோவிலூர் மடத்தின் நான்காம் பட்டமாக அருளாட்சி ஏற்ற சீர் வளர் சீர் இராமசாமி ஞான தேசிக சுவாமிகள், கோவிலூருக்கு வருகை தந்து, சீர் வளர் சீர் சிதம்பர ஞான தேசிக சுவாமிகளைக் குருவாக அடைந்து வேதாந்தப் பாடம் முழுவதும் கற்றவர் ஆவார். இவர் ஆயிரத்து

எண்ணூற்று முப்பத்தெட்டாம் ஆண்டில் காரைக்குடியில் பிறந்தவர். இவர் பொருள் வைத்தசேரியில் தங்கி இருந்து வேதாந்தம் உணர்ந்தவர்.

தமது குருவான சீர்வளர் சீர் சிதம்பர ஞான தேசிக சுவாமிகள் நிறைவாழ்வு பெற்ற நிலையில், அக்குருபிரானின் வழிகாட்டலின்படி சீர்வளர் சீர் இராமசாமி சுவாமிகள் பிரம்ம சபையில், பிரம்ம உபதேசம் செய்து கொண்டு, கோவிலூர் மடலாயத்தின் ஆதீன கர்த்தராக அமர்ந்தார்.

இவரிடம் பல சீடர்கள் வேதாந்தப் பாடம் கற்றனர். அவர்களுள் குறிக்கத்தக்கவர்கள் சாக்கோட்டை வீரப்ப சுவாமிகள், காளையார் கோயில் செல்லப்ப சுவாமிகள். இவர்களைப் பெரும் அருளாளர்களாக உருவாக்கிய பெருமை சீர் வளர் சீர் இராமசாமி ஞான தேசிகரையே சாரும்.

இவர் கோவிலூர் மடாலயத்தின் உணவுக் கூடத்தை விரிவாக்கிக் கட்டினார். மேலும் இவர் அருள்மிகு கொற்றவாளீசர் கோயிலில் அஷ்ட லெட்சுமி மண்டபத்தை அழகுடன் எழுப்பினார். மேலும் இக்கோ யிலுக்குப் புதிதாக மதிற்சுவர் இவர் காலத்தில் கட்டப்பெற்றது. மேலும் இவர் கழனிவாசல் கிராமத்தின் பெருவளர்ச்சிக்கும் வித்திட்டார்.

இவரின் அருளாட்சி ஏழரை ஆண்டு காலம் இனிதாக சீடர்களுடன் வேதாந்த விசாரங்களைச் செய்த வண்ணம் தொடர்ந்தது. ஆயிரத்து எண்ணூற்று எண்பத்து மூன்றாம் ஆண்டில் அதாவது சுபாநு ஆண்டில் மார்கழி மாத புதன் கிழமையன்று கிருஷ்ண பட்ச சஷ்டி திதி, மக நட்சத்தித்தில் சீர்வளர் சீர் இராமசாமி சுவாமிகள் இறைநிலை பெற்றார்.

## திருமந்திரம்

இகழ்ந்ததும் பெற்றதும் ஈசன் அறியும்
உகந்து அருள் செய்திடும் உத்தம நாதன்
கொழுந்தன்பு செய்தருள் கூர வல்லார்க்கு
மகிழ்ந்து அன்பு செய்யு அருளது வாமே.

**பொழிப்புரை:**

அன்பினைப் பொருட்படுத்தாமல் வன்னெஞ்சினராய்த் திரிவாரையும், அவ்வன்பினைப் பெற்று மென்னெஞ் சினராய் மேவி வாழ்வாரையும் சிவன் அறிந்து அவரவர் செய்கைகட்கு ஏற்றவாறு முறையே துன்ப இன்பங்களை அளிப்பன். அத்தகைய உகப்புடன் அருள்செய்யும் தலைமைசேர் முதல்வன். ஆருயிர்கள் முதற்கண் தொடர்புடையார்மாட்டு அன்புடையராய், அப் பயிற்சி மேலீட்டால் அனைத்து யிர்கள் மாட்டும் அருளுடையராய் ஒழுகவல்லார்க்கு மகிழ்ந்தன்பு செய்வன். அதுவே அவன் திருவருளுமாகும்.

# இருண்ட காலமா ?

பகுதி–1

**இரா. கலைக்கோவன்,**
இயக்குநர்,
டாக்டர் மா. இராசமாணிக்கனார்
வரலாற்றாய்வு மையம்,
திருச்சிராப்பள்ளி

பொதுக்காலம் 250வரை சங்க காலமாக வரையறுக்கப்பட்ட நிலையில் அதில் தொடங்கி, முதல் மகேந்திரவர்மப் பல்லவரின் பாட்டனார் நான்காம் சிம்மவர்மரின் ஆட்சிக்காலமான பொ. கா. 550 வரையிலான 300 ஆண்டுக் காலத்தை வரலாற்றாசிரியர்கள் பலர் இருண்டகாலமெனத் திரையிட்டு மூடியமைக்கு அக்காலக்கட்டத்தே போதுமான சான்றுகளும் பல்துறைப் புலமையோடு சான்றுகளை ஒருங்கிணைக்கும் பார்வையும் இல்லாமையே காரணம் எனலாம். கடந்த இருபதாண்டுகளில் வெளிப்பட்டுள்ள கல்வெட்டு, அகழாய்வுச் சான்றுகளும் இலக்கியம், கல்வெட்டுகள், செப்பேடுகள் சார்ந்த நுண்ணாய்வுகளும் இருண்டகாலப் பார்வையில் புத்தொளி பாய்ச்சியுள்ளன. அந்த ஒளித்திரளின் உதவியோடு பொதுக்காலம் 250 550க்கு இடைப்பட்ட காலத் தமிழ்நாட்டு வரலாற்றை அறிய உதவும் சான்றுகளை இனங்காண்பதே இக்கட்டுரையின் குறிக்கோள்.

## செப்பேடுகள்

தமிழ்நாட்டு வரலாற்றுடன் தொடர்புடையனவாக இது நாள்வரை கிடைத்துள்ள செப்பேடுகளில் காலத்தால் முற்பட்டவை பிராகிருதமொழியில் அமைந்த பல்லவர்களின் மூன்று செப்பேடுகளாகும். அவற்றுள் மயிதவோலுச் செப்பேடே பழைமையானது. முதல் சிம்மவர்மரின் 10ஆம் ஆட்சியாண்டின்போது யுவமகாராஜராக இருந்த சிவஸ்கந்தவர்மர் இரண்டு பிராமணர்களுக்குக் காஞ்சிபுரத்திலிருந்து அளித்த ஊர்க் கொடையைக் குறிக்கும் இச்செப்பேடு பொ. கா. 3ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியினதாகக் கொள்ளத்தக்கதாகும். இது குறிக்கும் முதல் சிம்மவர்மர் தம் மஞ்சிக்கல்லுக் கல்வெட்டு வழிக் கோயில் பட்டர்களுக்கு நிலக்கொடை அளித்தவர். கல்வெட்டு ஆந்திரப்பகுதியில் கிடைத்திருந்தபோதும் மன்னரின் 10ஆம் ஆட்சியாண்டின்போது அவரது மகனால் வழங்கப்பட்ட கொடை காஞ்சிபுரத்தில் இருந்து அளிக்கப்பட்டிருப்பதால், சிம்மவர்மர் காலப் பல்லவர் ஆட்சி ஆந்திரம், கருநாடகத்தின் ஒருபகுதி, தமிழ்நாட்டின்

தொண்டைமண்டலம் ஆகியவற்றை உள்ளடக்கி இருந்ததாகக் கொள்ளலாம்.

இக்கருத்தை வலியுறுத்துமாறு முதல் சிவஸ்கந்தவர்மரின் ஹீரஹடஹள்ளிச் செப்பேடும் காஞ்சிபுரத்திலிருந்தே வழங்கப்பட்டுள்ளது. அதுவும் பிராகிருதமொழியில் அமைந்த கொடைச் செப்பேடுதான். மயிதவோலுவில் யுவமகாராஜராக அறிமுகமாகும் சிவஸ்கந்தவர்மர் இச்செப்பேட்டில் தர்ம மகாராஜாதிராஜராகச் சுட்டப்படுகிறார். அவருடைய வழித்தோன்றலின் செப்பேடாக அறியப்படும் குணபதேயம் பல்லவராட்சி யிலிருந்து காஞ்சிபுரம் விடுபட்டமையை உணர்த்துகிறது. இப்பிராகிருதமொழிச் செப்பேடு ஸ்கந்தவர்மரின் மகன் புத்தவர்மரின் மனைவி சாருதேவி அளித்த கொடையைச் சுட்டுவதோடு அவர்தம் மகனாகப் புத்தியாங்குரனை வெளிப்படுத்துகிறது.

பிராகிருதச் செப்பேடுகளை அடுத்துப் பல்லவர்கள் வழங் கியனவாகக் கிடைக்கும் சமஸ்கிருதச் செப்பேடுகள் பலவாகும். அவற்றுள், யுவமகாராஜர் விஷ்ணுகோபருடைய மகனான இரண்டாம் சிம்மவர்மரின் செப்பேடுகள் குறிப்பிடத்தக்கவை. பல்லவமரபில் மிக அதிக அளவில் செப்பேடுகளை வழங்கியவர் அவரே. அவரது மகனான இரண்டாம் விஜயவிஷ்ணுகோபவர்மர் சுராச் செப்பேடுகளை வழங்கியுள்ளார். ஏறத்தாழப் பொ. கா. 350இல் தக்கணத்தை நோக்கிப் படையெடுத்து வந்த சமுத்திர குப்தரைத் தென்னாட்டின் 12 நாடுகளைச் சேர்ந்த அரசர்கள் எதிர்த்ததாகவும் அவர்களைச் சமுத்திரகுப்தர் வென்று, தோல்வியடைந்தவர்களிடமே நாடுகளை ஒப்புவித்ததாகவும் அப்படித் தோல்வியுற்ற அரசர்களுள் காஞ்சிபுரத்து விஷ்ணுகோபரும் ஒருவர் என்றும் அலகாபாத் தூண் கல்வெட்டுக் கூறுகிறது.

சமுத்திரகுப்தரால் தோற்கடிக்கப்பட்ட விஷ்ணுகோபரை இரண்டாம் சிம்மவர்மரின் மகனான இரண்டாம் விஜயவிஷ்ணு கோபவர்மராகவே கொள்ளமுடியும். அவர் தந்தையும் பேரரசருமான இரண்டாம் சிம்மவர்மர் காலத்தில் காஞ்சிபுரம் மீண்டும் பல்லவராட்சிக்கு உட்பட்டிருத்தல் கூடும். அதனாலேயே, விஷ்ணுகோபரைக் காஞ்சி அரசராக அலகாபாத் கல்வெட்டு அடையாளப்படுத்துகிறது. எனில், ஏறத்தாழப் பொ. கா. 335375இல் வடதமிழ்நாட்டின் ஒருபகுதி மீண்டும் பல்லவர் ஆட்சிக்கு வந்தமை தெளிவுறும்.

இரண்டாம் புத்தவர்மரின் தந்தையும் நான்காம் ஸ்கந்தவர்மரின் மகனுமான இரண்டாம் குமாரவிஷ்ணுவின் காலத்தில் காஞ்சிபுரம் பல்லவராட்சிக்கு உட்பட்டதாக வேலூர்ப்பாளையம் செப்பேடுகள் குறிப்பிடுவது கொண்டு, 4ஆம் நூற்றாண்டின் கடைப்பகுதிக்கும் 5ஆம் நூற்றாண்டின் தொடக்கக் காலத்திற்கும் இடைப்பட்ட நிலையில் இரண்டாவது முறையாகப் பல்லவர்கள் காஞ்சியை இழந்து மீண்டும் பெற்றமை அறியப்படும். அதன் பிறகு காஞ்சிபுரம் தொடர்ந்து பல்லவர்கள் கையிலிருந்ததை அங்கிருந்தே வெளியிடப்பெற்ற வேசந்தம், சேந்தலூர், உதயேந்திரம் செப்பேடுகள் தெளிவாக்கும். இரண்டாம் புத்தவர்மருக்கும் நான்காம் சிம்மவர்மருக்கும் இடையில் ஆறு பல்லவ அரசர்களை இச்செப்பேடுகள்

இனங்காட்டுகின்றன. காஞ்சிபுரத்தைப் பல்லவர்கள் இருமுறை இழந்தமைக்குக் களப்பிரர்களே காரணமாகலாம் எனுமாறு போல நான்காம் சிம்மவர்மரின் மகனான சிம்மவிஷ்ணு வென்ற அரசமரபுகளுள் களப்பிரர் இனமும் குறிக்கப்பட்டுள்ளமை இங்குக் கருதத்தக்கது.

இருண்டகாலமாக அறியப்படும் பொ. கா. 250550க்கு இடைப்பட்ட காலத்தில் தமிழ்நாட்டின் ஒருபகுதியை சங்கச் சோழமரபினர் தங்கள் ஆட்சியின் கீழ்க் கொண்டிருந்தமை பல்லவர் செப்பேடுகள் சிலவற்றாலும் பத்திமைப் பாடல்கள் சிலவற்றாலும் உறுதிப்படும். வேலூர்ப்பாளையம் செப்பேடு குறிக்கும் இரண்டாம் குமாரவிஷ்ணுவின் மகனான இரண்டாம் புத்தவர்மர், சமுத்திரம் போன்ற சோழர்களுடைய சேனைக்கு வடவாக்னியாகக் குறிக்கப்படுகிறார். இக்குறிப்புக் கொண்டு, புத்தவர்மர் காலத்தில், சோழர்கள் மிகுந்த வலிமையோடு எதிரணி அரசரே, 'சமுத்திரம் போன்ற' என்ற சுட்டலை வழங்கும் அளவிற்குப் படைப்பெருக்கத்துடன் தமிழ்நாட்டின் ஒரு பகுதியில் ஆட்சிசெலுத்தியமை அறியலாம். சோழர்களுடைய படைக்கு வடவாக்னி எனக் குறிப்பிடப்பட்டபோதும் புத்தவர்மர் சோழநாட்டைக் கைப்பற்றியதாக வேலூர்ப்பாளையம் செப்பேடு யாண்டும் குறிப்பிடாமை நோக்க, சோழர்களைப் பல்லவர்கள் போரில் சந்தித்தனரே தவிர, வெற்றிகொள்ளவில்லை என்பது தெளிவாகும்.

பள்ளன்கோயில் செப்பேட்டில் சிம்மவிஷ்ணு, 'கவேரன் மகளான காவிரிநதியை மாலையாகவும் நெல்வயல்கள், செழுமையான கரும்புவயல்கள் ஆகியவற்றை ஆடையாகவும் கமுகுத் தோட்டம், வாழைத்தோட்டம் ஆகியவற்றை ஒட்டியாணமாகவும் கொண்ட சோழர்பூமியைக் கைப்பற்றினான்' என்று சொல்லப்படுவது கொண்டு, பொ. கா. 6ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலேயே சோழராட்சி முடிவுக்கு வந்ததாகக் கொள்ளலாம். எனில், 4ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து 6ஆம் நூற்றாண்டின் பிற்பகுதிவரை தமிழ்நாட்டின் ஒருபகுதி சோழராட்சியின் கீழ் விளங்கியமை அறியப்படும்.

கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றும் (களவழி நாற்பது) பத்திமை இலக்கியங்கள் சிலவும் கோச்செங்கணான் எனும் சோழஅரசரை வீரம் செறிந்தவராகவும் பல அரசர்களைப் போரில் வென்று திறை பெற்றவராகவும் மாடக்கோயில் எனும் புதிய கோயிற்கட்டமைப்பை உருவாக்கியவராகவும் முன் நிறுத்துகின்றன. சோழர்காலச் செப்பேடுகள் சிலவும் விஜயாலயருக்கு முற்பட்ட சோழஅரசராக அவரை இனங்காட்டுகின்றன. அப்பர், சம்பந்தர், சுந்தரர், மங்கையாழ்வார் முதலிய பத்திமை ஆசிரியர்களால் பலபடப் போற்றப்படும் இம்மன்னர், காலத்தால் சிம்மவிஷ்ணுவுக்கு முந்தியவராவார். இருண்டகாலமாக அறியப்படும் காலஎல்லைக்குள், களப்பிரர் ஆட்சி இருந்ததாகக் கருதப்படும் சோழமண்டலத்தில் இப்பெருவேந்தரின் பெருமைக்குரிய ஆட்சியும் நிலவியமை எண்ணற்ற சான்றுகளால் நிறுவப்பட்டுள்ளது. சிவபெருமானுக்கும் விஷ்ணுவுக்குமாக 78 மாடக்கோயில்களை உருவாக்கிய இவர் குறுகிய

கால ஆட்சிக்குரியவராக இருந்திருத்தல் இயலாது.

சுந்தரரும் சம்பந்தரும் குறிப்பிடும் இவரது போர்க்கள வெற்றிகள், சேரஅரசரை இவர் வென்றதாகப் பொய்கையார் குறிப்பிடும் களவழிச் சுட்டல் ஆகியன கொண்டு நோக்குகையில், இரண்டாம் புத்தவர்மர் போரிட்டு வெல்லமுடியாமல்போன, சமுத்திரம் போன்ற சேனை உடைய சோழப் பேரரசராக விளங்கியவர் இக்கோச்செங்கணான் ஆகலாம் எனக் கருத இடமுண்டு. எனில், இன்றைக்குத் தமிழ்நாட்டில் பார்வைக்குக் கிடைக்கும் 34 மாடக்கோயில்களின் இருப்பிடம் கொண்டு நோக்குகையில், தற்போதைய தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி, திருவாரூர், நாகபட்டினம் மாவட்டங்கள் அடங்கிய நிலப் பரப்பு பொ. கா. 400550க்கு இடைப்பட்ட காலஎல்லையில் பல ஆண்டுகள் கோச்செங்கணானின் ஆட்சியில் இருந்தமை உறுதிப்படும். இவ்வேந்தருக்கு முன்பும் பின்பும் சோழமரபு உரிமை பெற்ற அல்லது சிற்றரசநிலையில் ஆட்சியில் தொடர்ந் திருந்தமையை சிம்மவிஷ்ணுவின் சோழமண்டல வெற்றி உறுதிப்படுத்தும்.

களப்பிரர் ஆட்சி தமிழ்நாட்டின் பல பகுதிகளில் இருந்ததாக அறியப்பட்டபோதும் அவர்தம் ஆதிக்கம் தென்தமிழ்நாட்டிலேயே மிக்கிருந்தமை, 'களப்பிரன் என்னுங் கலிஅரைசன் கைக்கொண்டதனை இறக்கியபின்' எனும் வேள்விக்குடிச் செப்பேட்டுச் சுட்டலாலும் 'மதுரை வவ்விய கருநடர் வேந்தன்' எனும் கல்லாடப் பாடலடியாலும் உணரப்படும். இவை கொண்டு சங்க காலப் பாண்டியருக்குப் பின்னும் கடுங்கோன் மரபினருக்கு முன்னும் மதுரையில் களப்பிரர் ஆட்சி இடையறாது இருந்ததாகக் கொள்ள வாய்ப்புண்டு. இந்நிலை பல்லவர்பகுதியிலோ, சோழர்பகுதியிலோ அமையாமையைப் பல்லவர் செப்பேடுகளும் கோச்செங்கணான் தொடர்பான சான்றுகளும் நிறுவுகின்றன.

மயிதவோலு தொடங்கிப் பள்ளன்கோயில் வரையிலான பல்லவச் செப்பேடுகள் அரசியல், பொருளாதாரம், சமூகம் சார்ந்த பல அரிய செய்திகளைப் பகிர்ந்துகொள்கின்றன. அரசின் அலுவல்நிலைகள், அலுவலர் உரிமைகள், அவர்தம் பணிகள், அரசால் பெறப்பட்ட வரிகள், அரசு செயற்பட்டவிதம், உத்தரவுகளை மீறுவாருக்கு வழங்கப்பட்ட தண்டனைகள், பிராமண ஊர்களின் உருவாக்கம், சிறப்பு, அவற்றின் தகுதிகள், பல்வகைத் தொழில்கள், தாவரவகைகள், மக்கள் வாழ்க்கை, தேவகுலங்கள், அவை தொடர்பான நிருவாகம் என அக்காலஞ் சார்ந்த எண்ணற்ற செய்திகளை இச்செப்பேடுகள் மிகச் செவ்வையாகப் பதிவுசெய்துள்ளன. இவற்றின் தொகுப்பு இருண்டகால வரலாற்றின் மீட்டுருவாக்கத்திற்குப் பெருந்துணையாகும்.

### கல்வெட்டுகள்

பொ. கா. 250க்கும் 550க்கும் இடைப்பட்ட காலத்தனவாகத் தமிழ்பிராமி, வட்டெழுத்துக் கல்வெட்டுகள் தமிழ்நாட்டின் பல பகுதிகளில் கண்டறியப்பட்டுள்ளன. திரு. ஐராவதம் மகாதேவன் இக்காலத்திற்குரியனவாக 17 தமிழ்பிராமி கல்வெட்டுகளையும் 17 வட்டெழுத்துக் கல்வெட்டுகளையும் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

இக்கல்வெட்டுகளின் பகுப்பாய்வு சமூகம் சார்ந்த பல செய்திகளைப் பகிர்ந்துகொள்கிறது. ஏழு ஊர்ப்பெயர்கள் (அவற்றுள் ஐந்து, ஊர் என்ற பின்னொட்டுக் கொண்டவை), இளவன், பெருங்கீரன் முதலிய தமிழ் ஒளிரும் ஆட்பெயர்கள், வாணிகம் பற்றிய இரண்டு குறிப்புகள் (பொன், எண்ணெய்), ஆடல் தொடர்பான தத்தகாரச் சொற்கட்டுகள் ஆகியவற்றோடு சங்கக் கோழிப்போரின் நினைவூட்டல்களும் கிடைத்துள்ளன. இக்கல்வெட்டுகளில் கிடைக்கும் பரம்பன், வியக்கன், கொற்றி எனும் ஆட்பெயர்களும் சேரி, பொய்கை எனும் இடப் பெயர்களும் சங்க, சங்கம் மருவிய கால இலக்கியங்களில் ஆளப்பட்டுள்ளமை கருதத்தக்கது.

இவை தவிர, பூலாங்குறிச்சியில் 1980இல் கண்டறியப்பட்ட, தமிழ்பிராமி வட்டெழுத்தாக மாறும் நிலையிலான எழுத்தமைதி பெற்ற இரண்டு கல்வெட்டுகளைக் குறிக்கையில் பேராசிரியர் எ.சுப்பராயலு, அவை களப்பிர அரசர்களைச் சுட்டுவதாகத் தெரிவித்துள்ளார். அவ்விரண்டனுள் பெருமளவு படிக்கத்தக்க நிலையிலுள்ள சேந்தன்கூற்றனின் கல்வெட்டு, வேள்மருகன் மகன் கடலகப் பெரும்படைத்தலைவன் எங்குமான், ஒல்லையூர்க்கூற்றத்து வேள்கூரிலிருந்த பச்செரிச்சில் குன்றிலும் முத்தூற்றுக் கூற்றத்திருந்த விளமரிலும் தேவகுலங்களையும் மதுரை உலவியத்தான் குளத்தின் வடபுறத்திருந்த தாபதப்பள்ளியில் வாசிதேவனார் கோட்டத்தையும் எடுப்பித்ததாகக் கூறுகிறது. அத்திகோயத்தார், உள்மனையார், நால்வகைத் திணைகள் ஆகிய குழுக்கள் அவற்றைத் தங்கள் காவலில் கொண்டு உரியன செய்தனர்.

இக்கோயில்களின் அறக்கட்டளைகளை மேற்கொண்டிருந்த பாண்டங்கர், சேவுக்கர், விருமச்சாரிகள், தருமிகள் ஆகியோரும் கிராமக்காவலரும் இக்கோயில்களில் வழிபாடு செய்ய யாரைப் பணிக்கு அமர்த்துகின்றனரோ அவர்களே வழிபாட்டை மேற்கொள்ளவேண்டும் என்று அரசர் உத்தரவிட்டதாகவும் இக்கல்வெட்டுக் கூறுகிறது. குழலூருத் துஞ்சிய உடையாரால் வேள்கூரில் குடியமர்த்தப்பட்டவர்களே பச்செரிச்சில் குன்றின் தேவகுலத்தில் குடும்பிகளாக அமைந்து, மரபுவழியாகக் குடும்புக்குரிய கடமைகளைச் செய்தல் வேண்டும்; தேவகுலத்தின் அனைத்துத் தேவைகளையும் நிறைவேற்றுவதோடு தவறு செய்வாரைத் தண்டிப்பதும் கடமையாகும்; அரசரின் இந்த ஆணை உலவியப் பெருந்திணையர் நல்லன்கிழான் எயினன் குமாண், கிழான் கீரன்காரி, அம்பருகிழான் குமாரம் போந்தை ஆகியோரால் கேட்கப்பட்டது. ஓலைஎழுத்தர் தமண்காரி கண்ணன் செய்தியைக் கொணர்ந்ததாகவும் வேணாட்டான் நாரியன் காரி இறுதி ஓலை எழுதியதாகவும் கூறும் இக்கல்வெட்டு, களப்பிரர் காலத்தில் வழக்கிலிருந்த கோயில்பொறுப்பு, வழிபாட்டு அமைப்பு, குடும்பு, குடும்பி தொடர்பான செய்திகள், அரசாணை செயற்பட்டவிதம், அரசு அலுவலர்கள் எனப் பல தரவுகளை முன்வைக்கிறது.

*(தொடரும்)*

# நல்லன எல்லாம் தரும் சுந்தர காண்டம்

பகுதி-6

## உருக்காட்டு படலம்

[பாடல்கள் 117]



**முனைவர் சரசுவதி இராமநாதன்,**
பள்ளத்தூர்

சீதைக்கு அனுமன் சில அடையாளங்களைச் சொன்னபின் அனுமன் இராமனது கணையாழியைக் காட்டினான். "காட்டினன் ஆழியை அந்த வாள்நுதலி கண்டாள்". அந்தக் கணையாழி சீதைக்கு எப்படிப்பட்ட உணர்ச்சிகளைத் தந்தது என்பதைக் கம்பன் சொற் சித்திரமாகக் காட்டிள்ளான்.

1.இழந்த மணி புற்றரவு எதிர்ந்தது எனலானாள்

அதாவது நாகம் ஒன்றுதன்னுடைய இரத்தினத்தை இழந்து, பின்பு அதை மீண்டும் பெற்றால் எத்தகைய மகிழ்ச்சி பெறுமோ. அத்தகைய மகிழ்ச்சியை அடைந்தாள் என்பது முதல் சித்திரம்.

2.வறுமையால் வாடுகிறவனுக்கு முன்னோர்கள் வைத்துச் சென்ற புதையல் கிடைத்தால் எப்படிப்பட்ட பேறாகுமோ அதுபோலத் தோன்றிற்று

3.மலடி மலடி என்று வையகத்தார் ஏசிய ஒருத்திக்குக் குழந்தைப் பேறு கிடைத்தால் அது எப்படி கங்குகரை காணா மகிழ்ச்சி தருமோ அத்தகைய மகிழ்ச்சி தந்தது.

4.பிறவியிலேயே பார்வையில்லாத ஒருவனுக்கு இறையருளால் திடீரென கண்பார்வை கிடைத்தால் அவன் எப்படிப் பட்ட உவகையில் திளைப்பானோ, அத்தகைய மகிழ்ச்சியில் திளைத்தாள்.

கணையாழியை அனுமன் கொடுத்தான் என்று வால்மீகியோ கம்பரோ சொல்லவில்லை. காட்டினன் அவள் வாங்கினனன் என்று போட்டதிலே ஒரு நுட்பம் இருக்கிறது.

மகான்கள் சுவாமிமார்கள் போன்றவர்களுக்கு நம் கை உயரத்திலே இருக்கும்படி எதையும் கொடுக்கக் கூடாது. நாம் கையில் வைத்துக் கொண்டு இருந்தால் அவர்கள் எடுத்துக்கொள்வார்கள். ஒருமுறை மகாகவி பாரதி புதுச்சேரியில் இருக்கும் போது தன் நண்பர் ஒருவரிடம் "செட்டியார்ஞ்.. ஒரு பத்து ரூபாய் வேண்டும்" என்று கம்பீரமாகக் கேட்டாராம். உடனே செட்டியார் பத்து ரூபாயை எடுத்து பாரதியார்



கையிலே கொடுத்தாராம். வேண்டாம் என்று குழந்தை மாதிரி முகத்தைப் பாரதியார் திருப்பிக் கொண்டாராம். செட்டியார் பதறிப்போய் “நான் தயக்கமே காட்டவில்லையேஞ் யோசிக்கவே இல்லையேஞ்.. உடனே தந்துவிட்டேனேஞ். நீங்கள் ஏன் வேண்டாம் என்கிறீர்கள்” என்று கேட்க. சிரித்துக் கொண்டு, மகாகவி பாரதி “அது என்ன உம்முடைய கை மேலே இருக்க புலவன் எம்முடைய கை கீழே இருந்து பெற்றுக் கொள்வது?, நீர் கையிலே வைத்துக் கொண்டு இரும் ஞ்... யாம் எடுத்துக் கொள்கிறோம்” என்றாராம். இது தற்காலத்தில் நடந்த நிகழ்ச்சி. இந்தநிகழ்ச்சி கம்பராமாயணம் தொடர்பாக நினைவுக்கு வருகிறது.

மகாலட்சுமிக்கு அனுமன் கை உயர்ந்திருக்க கணையாழியைக் கொடுத்தான் என்று சொல்லக் கூடாது என்பதிலே ”காட்டினன்” என்று இருகவிஞர்களும் சொல்லி ஒத்துப்போகிறார்கள்.

வாங்கினள்; முலைக் குவையில் வைத்தனள்; சிரத்தால்

தாங்கினள்; மலர்க் கண்மிசை ஒற்றினள்; தடந் தோள்

வீங்கினள்; மெலிந்தனள், குளிர்ந்தனள்; வெதுப்போடு

ஏங்கினள்; உயிர்த்தனள், இது இன்னது எனல் ஆமே?

என்றும்

மோக்கும்; முலை வைத்து உற முயங்கும்; ஒளிர் நல் நீர்

நீக்கி, நிறை கண் இணை ததும்ப, நெடு நீளம்

நோக்கும்; நுவலக் கருதும், ஒன்றும் நுவல்கில்லாள்;

மேக்கு நிமிர் விம்மலள்; விழுங்கலுறுகின்றாள்.

என்றும் கணையாழி பெற்ற சீதையின் உணர்ச்சிப் பிரவாகத்தைக் கம்பனுக்கு மேல் யார் விவரிக்க முடியும்? எதிரே இருப்பவன் ஆண் குரங்கு என்பதை மறந்து கணையாழியை இராமனாகவே எண்ணி மார்போடு தழுவிக்கொண்டாள். உணர்ச்சிப் பூர்வமாக பொங்கி வரும் விம்மலை அறிவு பூர்வமாக அடக்கிக் கொண்டாள்.

பசியால் துன்புற்றவருக்கு, அமுதம் கிடைத்து உண்டால் எப்படி இருக்கும். இறக்கும் தருவாயில் இருப்பவர்க்கு, சஞ் சீவி மருந்து கிடைத்து உயிர் மீட்டு வந்தால் எப்படி இருக்கும். அந்த நிலைதான் கணையாழி பெற்ற சீதையின் நிலை. “வாழி மணி ஆழி” என்று கணையாழியைக் கம்பர் வாழ்த்துகிறார். நன்றியினால் சில வார்த்தைகள் நவில்கிறாள் சீதை.

மும்மை ஆம் உலகம் தந்த முதல்வற்கும் முதல்வன் தூது ஆய்,

செம்மையால் உயிர் தந்தாய்க்குச் செயல் என்னால் எளியது உண்டே?

அம்மை ஆய், அப்பன் ஆய அத்தனே! அருளின் வாழ்வே!

இம்மையே மறுமைதானும் நல்கினை, இசையோடு’

என்றாள். அதற்கும் மேலாக ”வாழிய வள்ளலே” என்றழைக்கிறாள். எனக்கு உயிர் தந்த வள்ளல் நீ ஊழியெல்லாம் முடிந்தாலும் நீ இன்று போல் சிரஞ்சீவியாக என்றும் வாழ்க என வாழ்த்தினாள் அன்னை. அனுமன் பெற்ற பேறு இது.

## அறிவுப் பூர்வமான சில வினாக்கள்

என்னுடைய நாதனை நீ ங்கள் எப்படிச் சந்தித்தீர்கள், எங்கு சந்தித்தீர்கள் என்று சீதை கேட்க, சொல்லின் செல்வன் விடை தருகிறான். மாயமாரீசன் பொய்க்குரல் கொடுக்க நீங்கள் இலக்குவனை ஏசி அனுப்பினாயாம். இராமனும் இளவலும் சந்தித்தபின் திரும்ப வந்து பாரத்தால் பர்ணசாலையே இல்லையாம். அப்போது உயிரற்றது போல இராமன் மயங்கித் தவிக்க இலக்குவன் தேற்றி உன்னைத் தேடிக் கொண்டு இருவருமாக வந்தார்களாம். தன்னுயிர் புகழ்க்கு விற்ற ஜடாயுவைக் குற்றுயிராகக் கண்டுத் தவித்து துதித்து விவரங்கள் கேட்டறிந்து ”எவ்வழி சீதையை எடுத்துச் சென்றான்?” என்று வினவ விடை தருமுன் ஜடாயுவின் உயிர் விடைபெற்றதாம்.

அப்படித் தேடி வந்தவர்கள் இரலையம் குன்றுக்கு வந்தபோதுதான் நான் அவர்களைத் தரிசித்து என்தலைவன் சுகரீவனை நட்பு கொள்ள வைத்து, மகிழ்ந்தேன். நீ வானத்திலே தேரிலே சென்ற போது துணியிலே பொதிந்து கீழே போட்ட உங்கள் அணிகலன்களை இராமபிரானிடம் காட்டினேன். நீங்கள் கிடைத்து விடுவீர்கள் என்ற நம்பிக்கை பிறந்தது இராமனுக்கு. கார்காலம் முடிந்தபின் நாலாப்புறமும் வானரப் படைகள் உங்களைத் தேடி அலைந்தன. தென்திசை வந்த நான் உங்களைத் தரிசித்தேன்.

## சீதையின் அடுத்த கேள்வி

நீ இத்தனை சிறிய குரங்கு எப்படி இவ்வளவு பெரிய கடலைக் கடந்தாய்? என்றவுடனே அனுமன் மெல்லிடையாளே ‘‘உன் கணவன் இராமன் பெயரைச் சொன்னால் பிறவிக் கடலைக் கடக்கமுடியும் என்றால் இந்த உவர்க்கடலை எளியேன் கடந்தது வியப்பா ” என்று சொல்லித் தன் விசுவரூபத்தைக் (பேருருவம் ) காட்டத்தொடங்கினான்.

அடியும் முடியும் காண முடியாத அந்த நெடிய வடிவைப் பார்க்கமுடியாமல் சீதை பிரமித்தாள். நிச்சயமாக அரக்கர் இனி அழிவர்” என்ற நம்பிக்கை அவளுக்கு வந்தது. “எனக்கு அச்சம் தருகிறது உன் பேருரு.!! அடக்கிக்கொள்!!” என்று வேண்டினாள். ‘‘அன்னையே! அரக்கரை அழிக்க உங்கள் நாதனுக்குத் துணையாக நான் மட்டுமல்ல, அங்கதன், சுக்ரீவன், வசந்தன், குமுதன், நீலன், ஜாம்பவான், நளன் இப்படிப்பட்ட படை வீரர்கள எழுபது வெள்ளம் காத்து இருக்கிறோம். இந்த அரக்கர்கள் உறையிடக் கூட போத மாட்டார்கள் என்றுசொல்லச் சொல்ல ‘‘மகிழ்ச்சி, பெருமிதம், மனநிறைவு இவற்றோடு தன்னுடைய கருணைக் கண்களை அனுமன் திருவுருவில் செலுத்தி அருள் காட்டினாள் சீதா தேவி.

# சமய எழுச்சியால் சமூக மறுமலர்ச்சி காட்டிய

# அப்பர்

## அப்பரும் மகேந்திரரும் பண்பாட்டுப் புத்துயிர்ப்பில் இரு ஆளுமைகள்



**திருமதி மு. சுப்புலட்சுமி,**
வரலாற்றாய்வர்

ஆசிரியர்: www.glorioustamils.com,
www.attraithingal.com,

வலையொலி/ podcast
அற்றைத்திங்கள்...

வலையொலியில் தமிழொலி

இலக்கியங்கள் வாயிலாக, சங்ககாலம் தொடங்கிக் காப்பியகாலம் கடந்து பத்திமை காலத்துள் சுவைமிகு பயணத்தைத் தொடர்கையில், ஆற்றல்மிகு தமிழ்ப் படைப்பாளர்கள் சமயம்சார்ந்த தெளிவான வரலாற்றுப் பாதையையும் பார்வையையும் நமக்கு வழங்குகிறார்கள். வேலன் வெறியாட்டும், கொற்றவை வழிபாடும் வீரமிகு ஆற்றலுடன் நடந்தேறியதோடு பௌத்தப் பள்ளியும், சமணப் பள்ளியும், அந்தணர் பள்ளியும் அவரவர் முறைகளில் தமக்குள் இணக்கமாகச் செயல்பட்டதைச் சங்க இலக்கியம் காட்டுகிறது. பலவாகச் சிதறிக்கிடந்த புதிய கடவுளரும் அவர்கள் சார்ந்த கதைகளும் நம்பிக்கைகளும் பல்வேறு இனக்குழுவினரிடையே பெருகிவந்த நிலையைக் காப்பிய காலம் ஒளியூட்டுகிறது. இப்படி, காலம் சிறுகச்சிறுகச் செதுக்கித்தந்த பரந்துபட்ட இறைச்சிந்தனை, எங்கும் நிறைந்து இடர்களைந்து அனைத்து உயிர்களையும் காக்கும் ஒரிறைவன் சிவனே என்பதை வலியுறுத்தும் பேரியக்கமாக உருவெடுத்தது, அப்பர் பெருமான் சூலைநோயுற்றுச் சைவம் தழுவி, பிணி தீர்ந்து எழுந்த நேரத்தில்.

மகேந்திரர் புறச்சமயத்திலிருந்து சைவத்திற்கு மாறியதைத் திருச்சிராப்பள்ளி

குடைவரைக் கல்வெட்டு உரைக்கிறது. அந்தப் புறச்சமயம் சமணமென்று உறுதிசெய்வது சேக்கிழாரின் பெரியபுராணம். மகேந்திரர் சைவராக மாறியபின் எழுதிய நூலான 'மத்தவிலாச பிரகசனம்', அவர் காலத்தே பௌத்தம், காபாலிகம், பாசுபதம் ஆகிய பிற சமயங்களின் நிலை, பல்வேறு சமயத்தவர் தம்முள் இணக்கமின்றி இருந்தமை, பௌத்தர் தங்கள் சமயக் கட்டளைகளை மீறி வாழ்ந்தநிலை ஆகியவற்றைக் காட்டுவதாக டாக்டர் மா. இராசமாணிக்கனார் தம் 'பல்லவர் வரலாறு' நூலில் சுட்டுகிறார்.

இப்படிபட்ட சமயச் சிக்கல்களால் சமூகப் போராட்டங்கள் நிறைந்திருந்த காலக்கட்டம்தான் மகேந்திரர் என்ற மன்னரும் அப்பர் என்ற அடியாரும் சிறிதுகாலம் சமணர்களாக வாழ்ந்து, பின் சைவம் தழுவிய ஏழாம் நூற்றாண்டு.

மகேந்திரர் சைவத்திற்கு மாறக் காரணமாக இருந்தவர் அப்பர் என்பது நமக்குத் தெரியும். ஆனால், மன்னரை மாற்றிய அடியவரின் செயலால் அன்றைய தமிழகத்தில் ஏற்பட்ட மாபெரும் சமூக மறுமலர்ச்சி, பத்திமைப் பேரொளிக்குப் பின்னால் நம் பார்வைக்காகவும் புரிதலுக்காகவும் காத்துக் கிடக்கிறது. அப்பர் பல்லோரைத் தம் பாடல்களால் சிவனைப் பின்பற்றச் செய்திருப்பார். ஆனால், காஞ்சிமுதல் புதுக்கோட்டைவரை அகண்ட தமிழ்நிலத்தை ஆண்ட பல்லவப் பேரரசர் மகேந்திரரை மாற்றிய செயற்கரிய சிவநெறிச் செயல், அரசியல் பெருநிகழ்வாகவும் மாறிப் போனது.

போர்த்திறத்தில் சத்ருமல்லர், இசைவல்லமையில் பலபாடி மற்றும் சங்கீர்ணஜாதி, படைப்பாற்றலில் சித்திரக்காரப்புலி, பன்முகத் திறனில் விசித்திரசித்தர் என மகேந்திரரின் புகழ்ப்பாடும் சிறப்புப் பெயர்களுக்கு அவர் வாழ்வே சான்று. ஆனால், தமக்குச் சைவநெறியை அறிவுறுத்திய அப்பர் காரணமாகத் தமிழ் மண்ணுக்கு மன்னர் வழங்கிய கொடைகளை வெளிப்படுத்தும் சிறப்புப் பெயர்கள் நம்மை மேலும் சிந்திக்கத் தூண்டுகின்றன.


நாயன்மார், திருத்தவத்துறை

சமணம் விடுத்த மகேந்திரர் புத்தர்களின் வீழ்ச்சிக்கும் காரணராகிப் புக்கபிடுகு என்றும், தம் ஆளுகைக்குட்பட்ட தமிழ்நாடெங்கும் கோயில்கள் எழுப்பியதால் சேத்தகாரி என்றும் அழைக்கப்படுகிறார். இந்தப் பெயர்களைக் காட்டிலும் பெரும் ஈர்ப்புடைய மற்றொரு பெயர் மகேந்திரருக்கு உண்டு. கோயில் கட்டுமானக் கலையிலும் கோயில் சார்ந்த சிற்பம்இசைநடனம் கல்வெட்டு என்ற பல்துறைப் புதுமைகளாலும் 'மறுமாற்ற' என்ற பிராகிருதச் சொல்லால் அவர் போற்றப்படுகிறார். அதன் பொருள் 'மறுமலர்ச்சியாளர்' என்பது. திருநாவுக்கரசர் தம் பதிகங்களில் காட்டும்

சமூக மறுமலர்ச்சி பற்றி எழுதுகையில், அவரால் சைவத்துக்கு மாற்றப்பட்ட மகேந்திரர் 'மறுமலர்ச்சியாளர்' என்ற சிறப்புப் பெயருடன் போற்றப்பட்டது வியத்தகு தொடர்பு இல்லையா?

அப்பரும் மகேந்திரரும் சைவத்தால் இணைந்த இருவேறு ஆளுமைகள். அரசரும் அடியாரும் தத்தம் வழிகளில் மக்கள் வாழ்வைப் பத்திமையாலும் புதுமையாலும் வருடிச் சென்ற நிகழ்வே ஏழாம் நூற்றாண்டுப் பல்லவ மண்ணின் தலையாய வரலாறு. தமிழகத்தில் பண்பாட்டுப் புத்துயிர்ப்பு ஏற்படுத்திய இருவரின் பாதைகள் வேறென்றாலும் இணையும் புள்ளிகள் பலவாக இருப்பதைக் காணமுடிகிறது.

அவ்வகையில், மகேந்திரர் தம் கோயில்களால் வரலாறு படைக்கிறார்; அப்பரோ, தம் காலத்துக்கு முந்தைய தமிழகத்தில் கோயில் செழித்த வரலாற்றையும் தமிழகத்தின் கோயில்கலை வரலாற்றையும் தம் பதிகங்களில் படைத்தளிக்கிறார்.

தமிழகத்தின் முதல் கற்றளி, அதாவது கற்கோயிலை எழுப்பியவர் மகேந்திரர். இன்றைய விழுப்புரம் மாவட்டத்திலுள்ள மண்டகப்பட்டு என்ற ஊரில், மலையைக் குடைந்துத் தாம் அமைத்த கோயிலில், 'பிரம்மா ஈசுவரன் விஷ்ணுவிற்காகச் செங்கல், மரம், உலோகம், சுதையில்லாமல் 'லக்ஷிதாயதனம்' என்னும் இந்தக் கோயிலை விசித்திரசித்தன் கட்டினான்' என்று கல்வெட்டில் ஆவணப்படுத்துகிறார். புதுமைகளுக்குச் சொந்தக்காரர் என்பதை உணர்த்த 'விசித்திரசித்தன்' என்ற சிறப்புப் பெயரை இங்கு பயன்படுத்தும் மகேந்திரர், தலைசிறந்த குறிக்கோள்களுடன் தொடங்கிய தம் சைவப் பயணத்தைக் குறிக்கும் வகையில் 'லக்ஷிதன்' என்ற தம்முடைய மற்றுமோர் அடைமொழிப் பெயரை அக்கோயிலுக்குச் சூட்டுகிறார்.

மண்டகப்பட்டுக் குடைவரையால் வரலாறு படைத்தார் மகேந்திர பல்லவர் என்பது ஒருபுறமிருக்க, அதை ஆவணப்படுத்திய கல்வெட்டால் தமிழகக் கோயில் வரலாற்றுக்குப் பேருதவி புரிந்திருக்கிறார் அவர். அந்தக் கல்வெட்டு இல்லையென்றால், தமிழகத்தில் செங்கல், மரம், உலோகம் மற்றும் சுதையால் கட்டப்பட்ட, எளிதில் அழியக்கூடிய கோயில்கள் பல ஏழாம் நூற்றாண்டுக்கு முன்பே இருந்ததும், சைவ வைணவ வழிபாடு பல நூற்றாண்டுகளாகத் தமிழ்மண்ணில் தொடர்ந்த நிலையும் தமிழர் முழுமையாக உணர்ந்திருக்க இயலாது. மாமண்டூர், மகேந்திரவாடி, பல்லாவரம், சீயமங்கலம், தளவானூர், சிராப்பள்ளி ஆகிய ஆறு இடங்களிலும் குடைவரைகளை அமைத்தார் மகேந்திரர் என்பது குறிப்பிடத்தக்கது.

"இந்தச் சாதனையைச் செய்ய அந்த விசித்திரசித்தருக்குத் தூண்டுகோலாய் இருந்தவர் யார்? அப்பர் பெருமான்தானே! சமணராயிருந்தபோது தோன்றாத குடைவரைச் சிந்தனை சைவரானதும் குணபரருக்கு விளைந்தது ஏன்? அப்பரே காரணி என்பதினும் காரணம் வேறிருக்க முடியுமா?" என்று விதந்தோதுகிறார் வரலாற்றறிஞர் டாக்டர் இரா. கலைக்கோவன் ('அப்பர் என்னும் அரியமனிதர் 2').

மகேந்திரரைச் சைவத்தின்பால் திருப்பியது மட்டுந்தான் அப்பர் செய்த பெருஞ்செயலா? அப்பர் ஓர் அடியார், பதிகம்பாடி; ஆனால், தம்காலத்துக் கோயில்கள் மற்றும் தமக்கு முந்தைய தமிழகத்துக் கோயில்கள் குறித்த செய்திகளை ஆவணப்படுத்தும்

வரலாற்றறிஞராகவும் விளங்குகிறார்.

அப்பருக்கு முன்னர் திருமூலரும் காரைக்கால் அம்மையும் ஐயடிகள் காடவர்கோனும் சிவனைத் தனிப்பெரும் கடவுளாகத் தொழுதுப் பாடல்கள் புனைந்திருந்தனர். ஆயினும், தமிழகத்தின் அகண்ட நிலப்பரப்பில் பரவியிருந்த பற்பலக் கோயில்களுக்குக் காலயர நடந்துச் சென்று, அங்கே சிவவழிபாடு ஏற்கனவே செழித்திருந்ததைச் சொன்னதோடு, தமிழரின் கோயில் கட்டடக்கலை வல்லமையையும் வளர்ச்சி நிலையையும் பதிகங்களில் தெளிவுபடக் காட்டுகிறார் திருநாவுக்கரசர்.




## கோயில் கட்டமைப்பு வகைகள்

பெருங்கோயில், கரக்கோயில், ஞாழற்கோயில், கொகுடிக்கோயில், இளங்கோயில், மணிக்கோயில், ஆலக்கோயில், தூங்கானைமாடக் கோயில் என்று தமிழகத்தில் கட்டப்பட்டிருந்த எண்வகைக் கோயில்களைத் தம் பதிகங்களில் இனம்காட்டுகிறார்.

ஒரே பாடலில் ஏழு வகைகளைப் பட்டியலிடுகிறார்

பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும்
பெருங்கோயில் எழுபதினோ டெட்டும் மற்றுங்
கரக்கோயில் கடிபொழில்சூழ் ஞாழற் கோயில்
கருப்பறியற் பொருப்பனைய கொகுடிக் கோயில்
இருக்கோதி மறையவர்கள் வழிபட் டேத்தும்
இளங்கோயில் மணிக்கோயில் ஆலக் கோயில்
திருக்கோயில் சிவனுறையுங் கோயில் சூழ்ந்து
தாழ்ந்திறைஞ்சத் தீவினைகள் தீரும் அன்றே

மேவுகொண்டல் துன்னார் கடந்தையுள் தூங்கானை மாடச் சுடர்க்கொழுந்தே (4.109.1) என்று இன்றைய பெண்ணாகடத்துச் சுடர்க்கொழுந்தீசுவரர் கோயிலைச் சுட்டிப் பாடுகிறார். பதிகங்களில் இவர் வழங்கிய பெயர்கள் கொண்டே பல கோயில்களில் இறைவனும் உமையும் இன்றளவும் விளிக்கப்படுகின்றனர் என்பது கூடுதல் செய்தி.

கடந்தையுள் தூங்கானைமாடக் கோயில் போலவே, மீயச்சூர் இளங்கோயில், கடம்பூர் கரக்கோயில் என்று குறிப்பிட்டும் அடையாளப்படுத்துகிறார். புகலூர், புத்தூர், திருப்புறம்பயம், திருமாற்பேறு, திருவலஞ்சுழி என்று பலவாக இருக்கும் பெருங்கோயில் பட்டியலையும் தருகிறார் (6.070.11).

## நிலம் சார்ந்த கோயில் பெயர்களும் வகைகளும்

தமிழகத்துக் கோயில்களின் பெயர்கள் அவை அமைந்த நிலம் சார்ந்து, இயற்கை வளம் சார்ந்து, வணங்கப்படும் இறைவன்

சார்ந்து அமையப்பெற்றதையும் தம் பாடல்களில் காட்டுகிறார் அப்பர். ஆறாம் திருமுறையின் பொதுப்பதிகத்தின் (6.071) பதினொரு பாடல்களில் தேர்ந்த ஆசானைப்போல முறையாக அப்பெயர்களை விளக்குகிறார்.

முதல் பாடலில் சக்கரப்பள்ளி, திருக்காட்டுப்பள்ளி, சிராப்பள்ளி, சிவப்பள்ளி, செம்பொன்பள்ளி உள்ளிட்ட 10 பள்ளிகள்; இரண்டாவது பாடலில் கண்டியூர் வீரட்டானம், கடவூர் வீரட்டானம், அதிகை வீரட்டானம், வழுவூர் வீரட்டானம் உள்ளிட்ட 8 வீரட்டானங்கள்; மூன்றாவது பாடலில் செம்பங்குடி, நல்லக்குடி, நாட்டியத்தான்குடி, செங்காட்டங்குடி, கருந்திட்டைக்குடி உள்ளிட்ட 19 குடிகள்; நான்காவது பாடலில் ஆரூர், பெரும்பற்றப்புலியூர், நறையூர், நல்லூர், நாரையூர், உறையூர் உள்ளிட்ட 19 ஊர்கள்; ஐந்தாவது பாடலில் 78 பெருங்கோயில்கள் இருந்த குறிப்பு மற்றும் 7 கோயில் கட்டுமான வகைகள்; ஆறாவது பாடலில் மறைக்காடு, தலைச்சங்காடு, தலையாலங்காடு உள்ளிட்ட 8 காடுகள்; ஏழாவது பாடலில் முல்லைவாயில், ஆலவாயில், குடவாயில் உள்ளிட்ட 9 வாயில்கள்; எட்டாவது பாடலில் நாகேச்சுரம், அகத்தீச்சுரம், சித்தீச்சுரம், இராமேச்சுரம் உள்ளிட்ட 15 ஈச்சுரங்கள்; ஒன்பதாவது பாடலில் கேதாரம், காளத்தி, கழுக்குன்றம், அண்ணாமலை உள்ளிட்ட 17 மலைகள்; பத்தாவது பாடலில் நள்ளாறு, பழையாறு, திருஜயாறு உள்ளிட்ட 6 ஆறுகள், வளைகுளம், தளிக்குளம், உள்ளிட்ட 4 குளங்கள், அஞ்சைக்களம், நெடுங்களம் உள்ளிட்ட 3 களங்கள்; கோலக்கா, ஆனைக்கா உள்ளிட்ட 4 காக்கள்; பதினோராவது பாடலில் தவத்துறை, குரங்காடுதுறை, மயிலாடுதுறை உள்ளிட்ட 12 துறைகள் என்று வகைப்படுத்தி மலைக்க வைக்கிறார் திருநாவுக்கரசர் என்னும் திருத்தொண்டர்.

தனிக்கோயில் பெயர்கள் 134, பெருங்கோயில்கள் 78 சேர இந்தப் பதிகத்தில் மட்டும் 212 கோயில்களை அடையாளப்படுத்துகிறார் அப்பர் என்ற வரலாற்றாசிரியர். ஆய்வாளர்கள் அட்டவணையிட்டு ஆவணப்படுத்தக்கூடிய அளவில் முறையாக அளித்திருக்கும் பாங்கை என்னென்வென்று பாராட்டுவது! தனிக்கோயில் பதிகங்களிலும் இன்னபிற கோயில்கள் பற்றிய குறிப்புகள் தருவது அவர் இயல்பு.

அப்பர் பாடிய இந்தக் கோயில்கள் அவர் காலத்தே புதிதாகத் தோன்றியவை அல்ல; அவர் காலத்துக்குக் குறைந்தது நூறு நூற்றைம்பது ஆண்டுகளாகத் தமிழ்மண்ணில் வழிபாட்டில் இருந்தவை. அவர் வெளிப்படுத்தும் புராணச் செய்திகளோ, பல முந்தைய நூற்றாண்டுகளாகத் தமிழ்ச் சமூகத்தில் பரவியிருந்த கதைகள். கூடுதலாக, அவர் காட்டும் போற்றுதலுக்குரிய கோயில் கட்டடக்கலை வளர்ச்சி அப்பர் சைவத்துக்கு மாறிய காலத்துக்கு முன்பிருந்தே தொடர்ந்த தமிழகத்து வரலாறு என்பதையும் புரிந்துகொள்ள வேண்டும்.

சமணமும் பௌத்தமும் நிலைகுன்றிய ஏழாம் நூற்றாண்டுத் தமிழகத்தில், அப்பரால் பெயர் சுட்டப்பெற்றுப் பெருமையுற்ற இந்தக் கோயில்கள் புத்தொளியும் உயிர்ப்பும் பெற்றிருக்கும் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? அப்பரின் அன்புநெறிப் பாடல்கள் வழங்கும் இந்தச் ‘சமூக மறுமலர்ச்சித்’ தகவல்கள், தமிழகக் கோயில் வரலாறு பற்றிய இன்றியமையாத் தரவுகளாக இன்றைய ஆய்வுகளுக்கும் பேருதவி புரிகின்றன.

சிவனைப் போற்றிய அடியாராக மட்டும் நின்றுவிடாமல் தமிழகக் கோயில்களை அடையாளம் காட்டிய திருநாவுக்கரசர், மனத்தூய்மையோடு ஆலயத்தூய்மையின் தேவையை வலியுறுத்தி, அக்கோ யில்களின்பால் மக்கள் பொறுப்புகள் என்னென்ன? கோயில் பராமரிப்பு எப்படி இருக்கவேண்டும்? என்பனவற்றையும் அறிவுறுத்துகிறார். இறைவழிபாடு என்பது அன்புடையோர் கூடி இழுக்கவேண்டிய தேர் என்பதை, பத்திமையைத் தாண்டிய சமூகப் பற்றாளராகத் தம் பதிகங்களால் எங்ஙனம் அறிவுறுத்துகிறார் என்பதைத் தொடரும் கட்டுரையில் காணலாம்.

நன்றி: டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம், திருச்சிராப்பள்ளி.

துணைநூல்கள்

1. டாக்டர் மா. இராசமாணிக்கனார், சைவ சமயம்

2. டாக்டர் மா. இராசமாணிக்கனார், பல்லவர் வரலாறு

3. டாக்டர் மா. இராசமாணிக்கனார், பெரிய புராண ஆராய்ச்சி

4. டாக்டர் மா. இராசமாணிக்கனார், கால ஆராய்ச்சி

5. டாக்டர் இரா. கலைக்கோவன், காலப்பதிவுகள், வரலாறு.காம்

6. டாக்டர் இரா. கலைக்கோவன், பேரறிவாளர், வரலாறு.காம்

7. டாக்டர் இரா. கலைக்கோவன், அப்பர் எனும் அரிய மனிதர், பகுதி 1,2,3; வரலாறு.காம்

8. டாக்டர் இரா. கலைக்கோவன், இருண்ட காலமா?

# திருமந்திரம்

இன்பப் பிறவிக்கு இயல்வது செய்தவன்
துன்பப் பிறவித் தொழில் பல என்னினும்
அன்பில் கலவி செய்து ஆதிப் பிரான் வைத்த
முன்பு இப் பிறவி முடிவது தானே

**பொழிப்புரை:** இன்பப் பிறவி என்னும் பேரின்பத் தோற்றத்துக்கு வேண்டுவ அனைத்தினையும் அருளால் வகுத்தமைத்தவன். அப் பேரின்பத்தினை எய்துங் கருவியாகக் கொடுத்தருளிய இப்பிறவிக்கண் நேரும் துன்பம் பலவாகும். அதனைப் போக்குதற்குச் செய்யும் தொழிலும் பலவாகும். ஆயினும் அச் சிவபெருமான் திருவடிக்கண் நீங்கா அன்பு செய்து கலத்தல் வேண்டும். அங்ஙனம் கலப்பின் ஆதியாகிய அம்மையையுடைய சிவபெருமான் வைத்தளித்த திருவருள் வலிமையால் இப்பிறவியின்பமாக நிறைவெய்தும்

***********

அன்பு உறு சிந்தையின் மேல் எழும் அவ் ஒளி
இன்பு உறு கண்ணியொடு ஏற்க இசைந்தன
துன்பு உறு கண்ணி ஐந்து ஆடும் துடக்கு அற்று
நண்பு உறு சிந்தையை நாடுமின் நீரே.

**பொழிப்புரை:** மேலெழுந்து விளங்கும் சிற்றின்பம் பேரின்பமாகிய இரண்டனையும் முறையான் அருளவல்ல திருக்கண்களையுடைய அம்மையாருடன் இசைந்தனன். அன்பு செய்வாரை ஏற்றருளவே அங்ஙனம் இசைந்தனன். துன்பத்தை மிகுவிக்கும் புட்சிமிழ்க்கும் கண்ணி போன்ற ஐம்புலன் ஆட்டும் ஆட்டத்தின்படி ஆடும் பிணிப்பினை அறுத்து, சிவபெருமான் மாட்டு நட்புக் கொள்ளும் பயன் நிறைந்தவுள்ளத்தை நீங்கள் நாடுங்கள்.

# மெய்ஞானத் திருப்புகழில் விஞ்ஞானக் கூற்றுகள் (பகுதி-1)






**டாக்டர். வ.ஜெயபாலன்**
ஈப்போ ,மலேசியா

உள்ளம் உணர்ந்து அனுபவித்த உண்மைகளை, அறிவு ஆராய்ந்து உறுதிப் படுத்துகின்றது. மெய்ஞானத்தால் நமது ஞானிகளும் யோகிகளும் கண்ட பேர் உண்மைகளை, இன்றைய விஞ்ஞானம் மறு உறுதிப் படுத்துகிறது. நம்முடைய சமயக் கோட்பாடுகள், விஞ்ஞானத்தை அடித் தளமாகக் கொண்ட மெய்ஞானக் கட்டிடங்கள்.

சித்தர் இலக்கியங்கள், திருமந்திரம், தேவாரம், திருவாசகம் என்று இறைவனைப் போற்றும் நமது சமய நூற்களில், அறிவியல் சார்ந்த கூற்றுகள் ஏராளம், தாராளம். அந்த வரிசையில் அருணகிரிநாதர் எழுதிய திருப்புகழும் விதிவிலக்கு அல்ல.

மெய்ஞானச் சுடராகிய அருணகியார், மனித உயிரின் தோற்றம், வளர்ச்சி, மனிதனைத் தாக்கும் நோய் வகைகள், மூப்பு, இறப்பு, என்று மனித வாழ்க்கைக் கூறுகளை விஞ்ஞானப் பூர்வமாக தம்முடைய திருப்புகழ்ப் பாக்களில் பல இடங்களில் எடுத்துரைக்கின்றார்.

மனித உடலால் வரக் கூடிய இன்பத்தை அணு அணுவாய் அனுபவித்து, பின்னர் அல்லலுற்று நோய்களால் வருந்தி தன்னுடைய இள வயது வாழ்க்கையை வெறுத்தவர் அருணகிரிநாதர்.

இதன் காரணத்தால் மனித உடலின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் நோய் வகைகளையும் முதுமையையும் இறப்பையும், இறப்புக்குப் பின் உடலுக்கு நேரும் கதியையும் கூறி மனித வாழ்வு

என்பது இவ்வளவுதான், இதில் முருகனின் அருள் ஒன்றே நிலையானது, நீடித்திருப்பது என்று தான் கண்ட சுகானுபவத்தைப் பாடல்களில் விவரிக்கிறார்.

## திருப்புகழில் கருவியல் (Embroyology)

மனித உயிரின் தோற்றத்தைப் பற்றிய நுணுக்கங்களை இன்றைய விஞ்ஞானம், கருவியல் (Embryology) என்று வகை படுத்தியுள்ளது. இன்றைய சோதனைக் குழாய்க் குழந்தைகளுக்கும் மற்றைய மகப் பேறு இன்மைக்கான மருத்துவ முறைகளுக்கும் இந்த கருவியல் துறையே அடிப்படை.




ஆண் பெண் உயிரணுக்களை அருணகிரியார் விந்து அல்லது சுக்கிலம் என்றும். சுரோணிதம் என்றும் பதினைந்தாம் நூற்றண்டிலேயே வகைப் படுத்தி உள்ளார்.

மனித உயிர் வானத்தில் இருந்தோ அல்லது வேறு கிரகங்களில் இருந்தோ குதித்து வரவில்லை. மாயஜால வித்தைகளால் உருவாக்கப்பட்டதும் இல்லை. ஆணின் விந்து ஒரு பெண்ணின் உயிரணுவாகிய சுரோணிதத்துடன் இணைவதால், கரு என்ற ஒன்று உருவாகின்றது.

இதுவே உயிரின் தோற்றம் என்று பகுத்தறிவோடு கூறுகின்றார் அருணகிரியார். இதைத்தான் இன்றைய மருத்துவ விஞ்ஞானம், நுண்ணுயிர் நோக்கிகளின் (Microscope) துணையோடு உறுதி படுத்துகின்றது. இதைக் கருவியலில் உயிரணுக்களின் சேர்க்கை (Fertilisation) என்று கூறுகின்றார்கள்.

இதையே அருணகிரியார் சொல்கின்றார்,

விந்துப் புளகித இன்புற் றுருகிட
சிந்திக் கருவினி லுண்பச் சிறுதுளி
விரித்த கமலமெல் தரித்து ளெருசுழி
யிரத்த குளிகையொ டுதித்து வளர்மதி ஞ்ஞ்
(திருப்புகழ் – பொது)

என்றும்,

சுக்கி லச்சுரொணி தத்தி லுற்றுநளி
நத்தி லப்புவென ரத்த முற்றிசுக
சுக்கி லக்குளிகை யொத்து கெர்ப்பகுகை
................ வந்துகோலத்
.. (திருப்புகழ் – திருவருணை)

என்றும்,

விந்ததி நூறி வந்தது காம ..
(திருப்புகழ் – திருச்செந்தூர்)

என்றும் கூறுகின்றார்.,

ஆக, ஆணின் உயிரணுவாகிய சுக்கிலமும் பெண்ணின் சுரோணிதமும் ஒன்றுபட்டு, ரத்த நாளங்கள் ஊறி, ஒரு குளிகை (மாத்திரை) அளவு தாமரை இலை மேல் தண்ணீர் துளியென, குகை போன்ற கருப்பத்தில் தோன்றுகின்றது. இதுவே அருணகிரிநாதர் சொல்லும் உரிரணுக்களின் சேர்க்கை.

அடுத்தக் கட்டமாக, கருப்பையில் உருவாகிய கரு படிப்படியாக, ஒரு குழந்தையாக உருப் பெறுவதையும் அருணை முனிவர் திருப்புகழில் இப்படி விவரிக்கிறார்.

பனியின் விந்துளி போலவே கருவினுறு
மளவி லங்கொரு சூசமாய் மிளகுதுவர்
பனைதெ னங்கனி போலவே பலகனியின் வயிறாகிப்

பருவ முந்தலை கீழதாய் நழுவி நில
மருவி ஒன்பது வாசல்சேர் உருவமுள
பதுமை யின்செயல் போலவே வளிகயிறி
னுடனாடி ..

(குன்றுதோறாடல் – கயிலைமலை)

பனித்துளி போன்ற விந்து, கருவில் சேர்ந்தவுடன், அங்கு ஒரு சூசமாய் (அறிகுறியாய்) தோன்றுகிறது. அதன்பின், சில நாட்களில் மிளகின் அளவாகவும், பின்னர் பாக்கின் (துவர்) அளவாகவும் அதன் பிறகு பனம் பழம் அளவாகவும், அதற்கு அடுத்து தேங்காய் (தெனங்கனி) அளவாகவும், முதிர்ச்சியான கருப்பை, பலாப்பழத்தின் அளவாகவும் வளர்ச்சி காண்கிறது என்று, கருவுற்ற தாயின் வயிற்றில் இருக்கும் கருவின் வளர்ச்சியை விவரிக்கின்றார்.

குழந்தை பிறப்பதற்கு சில வாரங்களுக்கு முன்பு, கருவில் இருக்கும் சிசுவின் தலைப் பகுதி கீழ் நோக்கி திரும்ப வேண்டும். குழந்தை கருப்பையில் இருந்து வெளியாகும் பொழுது தலைப்பகுதி முதலில் வெளி வர வேண்டும். இதைத் தான் பருவமுந்தலை கீழதாய் நழுவி நில மருவி என்று சொல்கிறார்.

இன்னொரு பாடலில், (விந்துப் புளகித இன்புற்றுருகிடஞ்..,) ஏழாம் மாதம் தாயின் வயிற்றின் அளவு குடம் போலவும், மெழுகில் படிந்த வடிவம் போல குழந்தை உருப் பெறுவதையும் கூறி, பத்தாவது மாதம், தாமரை வடிவுள்ள பெண் உறுப்பு வழியாக, அசுத்தமான கழிவு நீருடன் குழந்தை வெளி உலகிற்குத் தள்ளப் படுவதை விவரிக்கிறார்.

இதைத்தான் இன்றைய மருத்துவ விஞ் ஞானமும் இயற்கையான குழந்தை பிறப்பு என்று சொல்கின்றது. இந்த உண்மையை 15ஆம் நூற்றாண்டிலேயே ஒரு துறவியான அருணகிரிநாதப் பெருமான் ஒரு பக்தி நூலில் பாடி இருப்பது வியப்புக்குரியது.

இதைத் தவிர இன்னும் பல இடங்களில் தாயின் கருப்பையில் குழந்தை கரு தரித்த நாள் முதல், மண்ணில் வந்து பிறக்கும் வரை நடக்கும் பல விஷயங்களைக் கூறியுள்ளார்.

**அழகான ஓர் எடுத்துக்காட்டு:**

“–––..–. மெழுக்கி லுருவென வலிந்து எழுமதி

கழித்து வயிர்குட முகுப்ப வொருபதில்
விஞ்சைச் செயல்கொடு கஞ்சச் சலவழி
வந்துப் புவிமிசை பண்டைச் செயல்கொடு
விழிப்பொடு தலை அழுக்கு மலமொடு
கவிழ்த்து விழுதழு துகுப்பு அனைவரு –
மருள்கூர (திருப்புகழ் – பொது)

கருவடைந்து பத்துற்ற திங்கள்
வயிறிருந்து மற்றும் பயின்று
கடையில் வந்துதித்துக் குழந்தை வடிவாகி
(திருப்புகழ் – திருப்பரங்குன்றம்)

திருப்புகழில் குழந்தையைப் பெற உதவி செய்யும் தாதியரை ”நரை மாதர்” என்று அழைக்கிறார். இதனால், அன்றைய காலத்திலேயே தமிழ் நாட்டில் தாதிமைத் தொழில் (Midwife) இருந்தது நன்கு புலப்படுகிறது.

இதைத்தான் அழகிய தமிழில் அருணகிரிநாதர் இப்படிச் சொல்கின்றார்.

“கருவாகியே தாயுக ரத்தினி
லுருவாகவே கால்கையுருப்பொடு’
கனிவாய்விழி நாசியுட ற்செவி நரைமாதர்
கையிலேவிழ வேகிய நைத்துயி
லெனவேகமிக மீது துயிற்றிய
(திருப்புகழ் – பழமுதிர்ச்சோலை)

## திருப்புகழில் நோயியல்

இளவயதிலேயே அருணகிரிநாதர்




குஷ்ட நோயினால் அவதிப்பட்டுள்ளார். முருகனின் திருவருளால் அந்த நோய் நிவர்த்தியாகியது. பின்னர், முருகனின் புகழ் பாடும் திருப்புகழையும் இதர பல நூல்களையும் எழுதினார் என்பது வரலாறு.

இதனால், நோயினால் அவர் பட்ட துயரத்தையும் அவர் காலத்தில் காணப்பட்ட பலவித நோய்களைப் பற்றியும் பல பாடல்களில் குறிப்பிட்டுள்ளார்.

நோய் இன்னதென்று அடையாளம் கண்ட பின்னரே அதற்கான மருந்தைக் கூறலாம். இதற்கு நோய்களைப் பற்றிய அறிவு அவசியம். இதுதான் இன்றைய மருத்துவம் கூறும் நோயியல் துறை. இன்றைக்கு நாம் பார்க்கும் பல நோய்களைப் பற்றி அன்றைக்கே அருணை முனிவர் எழுதி இருக்கிறார் என்பது உலகம் பார்க்காத ஓர் அதிசயம்.

உடம்பு என்று இருந்தால் நோய் என்பது இருக்கும். நோய் இல்லாத வாழ்வு பெற தூய வாழ்க்கை முறையும் இறைவனின் திருவடித் துணையும் அவசியம் என்பது அருணகிரியார் வாக்கு.

“இருமலு ரோக முயலகன் வாத
மெரி குண நாசி – விடமே நீ
ரிழிவி டாத தலைவலி சோகை
எழுகள மாலை இவையோடே

பெருவயி றீளை யெரிகுலை சூலை
பெருவலி வேறு முல நோய்கள்
பிறவிக தோறு மெனைநலி யாத
படியுன தாள்க ளருள்வாயே ''

(திருப்புகழ் – திருத்தணி)

இருமலை ஏற்படுத்தும் ஆஸ்த்துமா போன்ற நோய்களை இருமலுரோகம் என்கிறார். முயலகன் என்பது ஒரு வகை வலிப்பு நோய். இந்த நோய் உடையவர்கள் கை கால்களை மடக்கிக் கொண்டு நடராஜப் பெருமானின் காலுக்கு அடியில் முடங்கிக் கிடக்கும் முயலகன் என்ற அரக்கனைப் போல இருப்பார்கள்.

எரிகுணம் என்று இவர் கூறுவது எரிச்சலைத் தரக் கூடிய நரம்பு சம்பந்தப்பட்ட நோய் (Neuropathy). நாசிவிடம் என்பது மூக்கில் ஏற்படும் ஒவ்வாமை (Allergy). விடாத தலைவலி எனப்படுவது இன்றைக்கு நாம் பார்க்கும் மைக்ரேன் (Migraine) போன்ற தலைவலி நோய்கள்.

திருப்புகழில் சொல்லப்படும் ''எழுகளமாலை'' என்பதும் ''கண்டமாலை'' என்பதும், கழுத்தைச் சுற்றி மாலை போல ஏற்படும் ஒரு வகை வீக்கம். இதையே இன்றைய மருத்துவத்தில் தைராய்டு சுரப்பி வீங்குதல் என்று சொல்கிறோம். இன்றைக்கு பெரும் அளவில் நாம் பார்க்கின்ற வயிறு பெருத்தலை (Obesity) பெருவயிறு நோய் என்று சொல்லி இருக்கிறார்.

ஈளை என்பது சளி சம்பந்தப்பட்ட சுவாச நோய்கள். எரிகுலை என்பது குடல் புண்களால் வரும் குடல் எரிச்சல். சூளைப் பெருவலி என்று தொழு நோயைக் குறிக்கிறார்.

திருப்புகழில் நோய்ப் பட்டியல் இன்னும் நீள்கிறது. குளிர்க் காய்ச்சலை உண்டாக்கும் மலேரியா நோய் அந்தக் காலத்திலும் இருந்து இருக்கின்றது. அதைக் குளிர் காசம் என்கிறார். மூல நோய் பற்றியும், வயிற்றுப் புண் நோய் பற்றியும் சில பாடல்களில் கூற்றுகள் இருக்கின்றன.

வாதம் பித்தமி டாவியி றீளைகள்
சீதம் பற்சனி சூலைம கோதர
மாசங் கட்பெரு மூலவி யாதிகள் குளிர்காசம்
மாறுங் கக்கலோ டேசில நோய்பிணி
யோடுந் தத்துவ காரர்தெ னூற்று

(திருப்புகழ் – பழநி)

**விளக்கம்:**

சூலை – வயிற்றில் வேல் பாய்ச்சியது போல் வரும் வயிற்று வலி

மகோதரம் – பெருத்த வயிறு

பெரு மூல வியாதிகள் – ஆசனத் துளையில் வரும் மூல நோய்கள்

குளிர்காசம் – குளிர் காய்ச்சல்

பல பாடல்களில் வாத நோயைப் பற்றியும், இருமலைத் தரும் சுவாச நோய்களைப் பற்றியும், வயிற்றுத் தொல்லைகளைப்

பற்றியும் குறிபிட்டுள்ள அருணகிரிநாதர் இன்றைக்கு அதிகம் காணப் பெறக் கூடிய இதய நோய்களைப் பற்றித் தெளிவாகக் கூறவில்லை.

இது அன்றைய நாட்களில் இதய நோய்களைப் பற்றிய அறியாமையினால் இருக்கலாம். அல்லது அன்றைய வாழ்க்கை முறைகளில், இதய நோய் அதிகம் இல்லாத காரணத்தினாலும் இருக்கலாம்.

“தலைவலி மருந்தீடு” என்று திருப்புகழில், மருந்தினால் வரும் நோய்களையும், வெகுசலம் என்று நீரிழிவு நோயினையும், இரத்த சோகை, மஞ்சள் காமாலை போன்ற நோய்களைப் பற்றியும், கூறுகிறார்.

தலைவலி மருந்தீடு காமாலை சோகைசுரம்
விழிவலி வறட்சூலை காயாசு வாசம்வெகு
சலமிகு விஷப்பாக மாயாவி காரபிணி
யணுகாதே

(திருப்புகழ் – பழநி)

## நோய்களின் காரணம்

கிருமிகள்தான் நோய்களின் காரணம் என்று, மேற்கத்திய விஞ்ஞானிகள் 19ஆம் நூற்றாண்டில்தான் கண்டுபிடித்தார்கள். ஆனால், இதே கூற்றை 15ஆம் நூற்றாண்டிலேயே வள்ளிமலைத் திருப்புகழில் அருணகிரிநாதர் அறிந்து தெளிந்து பாடி உள்ளார். மனித உடலை ‘கிருமி வீடு’ என்றும் ‘அரிய புழுவது நெளியும் உடல்’ என்றும், (”குருதி மலசல மொழுகு நரகுடல்” என்று துவங்கும் பழநிமலைத் திருப்புகழ் பாடல்), பாடி




இருக்கிறார்.

## மூப்பியல்

மனிதன், தூய வாழ்க்கை முறைகளால் நோயைத் தவிர்க்கலாம். ஆனால், முதுமையைத் தவிர்க்க இயலாது. இறை வழிபாட்டின் மூலம் முதுமையின் தாக்கங்களை எதிர்கொள்ளலாம்.




அருணகிரிநாதர் பாடல்களில் முதுமையின் விளைவுகளை விவரித்து, அதை எதிர்கொள்ள முருகப் பெருமானின் துணை வேண்டும் என்கிறார்.

தொந்தி சரிய மயிரே வெளிற நிரை
தந்த மசைய முதுகே வளைய இதழ்
தொங்கிவொருகை தடிவேல்வர மகளிர் நகையாடி

தொண்டுகிழவ நிவனாரென இருமல்
கிண்கிணெமு நுரையே குழறவிழி
துஞ்சுகுருடு படவே செவிபடு செவியாகி
..................................................."

(திருப்புகழ் – திருச்செந்தூர்)

## முதுமையின் அறிகுறிகள்:

தொந்தி சரியும், மயிர் வெளுக்கும், தந்தம் போன்ற பற்கள் உறுதி இழந்து அசையும். முதுகு வளையும். (Osteoporosis) கண்ணொளி மங்கும். (cataract) (விழி துஞ்சு குருடுபடும்), செவி செவிடுபடும்.




இவை எல்லாம் எமன் மனிதனுக்கு விடும் தூது. இந்த அறிகுறிகள் தோன்றும் பொழுது இறை வழிபாடு ஒன்றே நம்மை எமனின் பாசக் கயிற்றில் இருந்து காப்பாற்றும் ஆயுதம் என்கிறார் அருணகிரிநாதர்.

## மரணம்

முதுமையைப் பற்றி பாடியவர், உடல் நிலையற்றது என்று மனிதனின் மரணத்தையும் பாடுகிறார்.




"விந்துப் புளகித இன்புற்றுருகிட" எனத் துவங்கும் குன்றுதோறாடல் திருப்புகழிலும், "இத்தாரணிக்குள் மனு வித்தாய் முளைத்தெழுந்து", எனத் துவங்கும் பழநிமலைத் திருப்புகழிலும், ஒரு சராசரி மனித வாழ்வின் ஒவ்வொரு நிலையையும் எடுத்துக் கூறி, இறுதியாக, அவன் இறப்பையும், இறந்த பிறகு அவன் உடலுக்கு நேரும் கதியையும் விலாவாரியாக எடுத்துச் சொல்கிறார். என்னே அவருடைய தீர்க்க தரிசனம்.

இதன் மூலம் நிலையாமைத் தத்துவம் நன்கு புலப்படுகிறது. மரண பயம் நம்மை விட்டு விலகுகின்றது. மனிதனின் முதுமையையும் இறப்பையும் இவ்வளவு விவரமாக, தெளிவாகக் காட்டும் பக்தி இலக்கியம் என்றால் அது திருப்புகழ் ஒன்றாகத்தான் இருக்க முடியும்.

## முடிவுரை

திருப்புகழ் பாக்கள் வெறும் சந்த நயத்துக்காக மட்டும் யாரோ ஒரு தமிழ்ப் புலவன் எழுதிய பக்தி இலக்கியம் அல்ல. அது ஓர் அமுத சுரபி. நாம் எந்தக் கோணத்தில் திருப்புகழைப் படிக்கிறோமோ, அந்தத் துறைக்கான தகவல்கள் அனைத்தையும் அதில் பெறலாம்.

ஒரு பக்தி இலக்கியமாகப் பார்த்தால், அது ஒரு பக்தி இலக்கியம். சமரச சமய நோக்குடையவர்களுக்கு அது ஒரு சமரச சமயநூல். சமுதாயப் புரட்சியாளனின் கண்ணுக்கு அது ஒரு சமுதாய நூல். இசை அறிஞனுக்கு அது ஓர் இசை நூல். அதைப் போல, மருத்துவ அறிவியல் கண் கொண்டு பார்ப்பவர்களுக்கு அது ஒரு மருத்துவப் பெட்டகம்.




மனிதனின் பிறப்பு முதல் இறப்பு வரை நடக்கக் கூடிய அனைத்து விஷயங்களையும் அறிவியல் பூர்வமாகத் திருப்புகழில் காணலாம்.

மெய்ஞானம் என்பது மூட நம்பிக்கை அல்ல. கண்மூடித்தனமான சடங்குகள் அல்ல. விஞ்ஞானம் இன்றைக்குச் சொல்கின்ற உண்மைகளை அருணகிரிநாதர் போன்ற மெய்ஞானிகள் அன்றைக்கே உணர்வலைகளால் தொட்டு விட்டார்கள் என்பதே நிதர்சனமான உண்மை.

## துணை நூல் பட்டியல்

1.1. திருமுக கிருபானந்தவாரியார், திருப்புகழ் விரிவுரை. – பழநி, பழமுதிச்ச்சோலை, திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், வானதி பதிப்பகம். சென்னை, 2000

1.2. புலவர் அ. மாணிக்கனார், திருப்புகழ் மூலமும் உரையும் – முதல் பாகம் முதல் நான்காம் பாகம் வரை, வர்த்தமானன் பதிப்பகம், சென்னை, 2000

# திருமந்திரம்

புணர்ச்சியுள் ஆயிழை மேல் அன்பு போல
உணர்ச்சியுள் ஆங்கே ஒடுங்க வல்லாருக்கு
உணர்ச்சி இல்லாது குலாவி உலாவி
அணைத்தலும் இன்பம் அது இது ஆமே.

**பொழிப்புரை:** கருத்தொத்த காதலிருவர் அன்புருகிக் கூடும்போது ஆடவர் மகளிர்மாட்டுச் செய்யும் இன்ப ஏதுவாகிய அன்பு அளவிறந்தது. அதுபோன்று, சிவபெருமான்மாட்டு வைக்கும் பேரன்பாகிய உணர்ச்சியும் அளவிறந்தது. அவ்வுணர்ச்சியே தாமாக அடங்கவ ல்லார்க்கு உலகப்பற்றாகிய உணர்ச்சி சிறிதும் தோன்றாதவாறு சிவபெருமான் செய்தருள்வன். அவ்வுயிருடன் இன்புறும் வண்ணம் குலாவிக் கலந்து தன்னுடன் அணைத்தருள்வன். அணைத்து இன்பமும் கொடுத்தருள்வன். அப்பொழுது 'அது' என்று சொல்லப்படும் சிவத்துள் ஒடுங்கினமையால் 'இது' என்னும் ஆவி முழுநீறு பூசிய முனிவர் போன்று சிவமாகவே காணப்படும். அணைத்தல் தன்னொடு கூட்டல்.

# கோவிலூர் ஆதீன வெளியீடுகள்
# கோவிலூர் புதையல்கள் - 7

# பழனியப்ப ஐயா அவர்களின் பாடற்றிரட்டு



உ
சிவமயம்.
பாண்டிநாட்டிலுள்ள
கோயிலூர் மடாலயத்தின்
சிஷ்யராகிய
சொர்னநாதபுரம்
பழனியப்ப ஐயா அவர்கள்
இயற்றிய
பாடற்றிரட்டு.

இஃது
ஷை மடாலய சிஷ்யராகிய
ஒய்யக்கொண்டான் சிறுவயல்,
முரு-அள-
சுப்பிரமணியஞ் செட்டியாரவர்களால்
தஞ்சாவூர், சதாவதானம்,
சுப்பிரமனிய ஐயரவர்கள்
முன்னிலையில்
பரிசோதிக்கப்பட்டு,

சென்னை:
மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.
1898-ம்

## - நூல் அறிமுகம்



- கு. அன்பு மெய்யப்பன்,
உதவிப் பேராசிரியர்,
இராமசாமி தமிழ்க் கல்லூரி,
காரைக்குடி - 3.

இந்த நூலை முழுமையாகத் தரவிறக்கம் செய்ய இந்த லிங்க்கை கிளிக் செய்யவும்



கோவிலூர் மடத்தின் சீட பரம்பரை போற்றுதலுக்குரியது. 200 ஆண்டுகள் நிறைவு செய்த இம் மடம் உருவாக்கப்பட்டதன் நோக்கம் இன்றுவரை நிறைவேற உறுதுணையாக இருப்பவர்கள் சீடர்களே. அச்சீட பரம்பரையில் பலர் கவிஞர்களாக இருந்துள்ளனர். அவர்களில் ஒருவர் சொர்னநாதபுரம் பழனியப்ப ஐயா. இவர் சேந்தினி பழனியப்ப ஐயா எனவும் அழைக்கப்படுகிறார். கோவிலூரில் இருவகையான துறவிகள் இருந்துள்ளனர். காவியாடை உடுத்தியவர்கள் சாமி எனவும், இல்லறத்திலிருந்து கொண்டு ஆன்மீகத்தில் ஈடுபட்டவர்கள், வெள்ளையாடை உடுத்திக் கொண்டனர். அவர்கள் ஐயாக்கள் எனவும் அழைக்கப்பட்டுள்ளனர். வெள்ளையாடை உடுத்திய துறவியே

சேந்தினி பழனியப்ப ஐயா ஆவார்.

இவரது சமாது கோவிலூர் மடத்தை அடுத்துள்ள பனம் கொல்லையில் இருக்கிறது. ஆண்டவரிடமும், துறவாண்டவரிடமும் வேதாந்தம் கற்றவர் பழனியப்ப ஐயா அவர்கள். முதல் மூன்று மடாதிபதிகளைப் பற்றியும் இவர் பாடல்கள் இயற்றியுள்ளார்.

## ஆண்டவர் பற்றிய பாடல்

வெய்யவினை தீர்க்குமடி மேலோர் வணங்குமடி

ஐயம்திரி பைஅகற் றும்அடி – மெய்யன்பர்

உய்யுநெறி காட்டுமடி, ஒப்பில் கழனியில்வாழ்

அய்யன் முத்துராமன் அடி.

ஆண்டவரின் திருவடி சிறப்பைக் கூறுகிறது இப்பாடல்.

துன்பம் தரும் செயல்களை நீக்கும் அடி. உயர்வானவர்கள் வணங்கும் அடி. சந்தேகங்களை அறவே அகற்றும் அடி. உண்மையான அடியவர்களுக்குப் பிழைக்கும் வழியைக் காட்டும் அடி. ஒப்பில்லாத கோயிலூரில் வாழும் ஆண்டவரின் திருவடி.

## துறவாண்டவர் பற்றிய பாடல்

இன்பம் அளிக்குமடி என்வினையை நீக்கும்அடி

துன்பங்கள் எல்லாம் தொலைக்குமடி– அன்பார்

கருணா கரனாம் கழனிநகர் வாழும்

அருணா சலன்சே வடி.

துறவாண்டவரின் திருவடிப் பெருமையை விளக்கும் ஒப்பற்ற பாடல்

இன்பத்தைத் தருமாம் அவரது திருவடி. பாவங்களைப் போக்கும் ஒப்பிலாத அடி. துன்பங்களைத் துடைத்தெரியுமாம். அன்பர்களிடம் கருணை கொண்ட கோயிலூர் வாழும் துறவாண்டவரின் சிவந்த அடிகள் என்று பாடுகிறார் பழனியப்ப ஐயா.

## கருணாநிதி சுவாமிகள் பற்றிய பாடல்

மதம்படுகடைமினார் தம் மையலுட் படாமல் ஈசன்

பதம்பெற எனக்கு மேன்மை பாலிக்கும் அருளைக் குன்றின்

இதம்பெறு துணைவன் ஆகிஎன் உயிர்த் துணையுமான

சிதம்பரம் பெரியோரை செம் பொற் சேவடி சென்னி சேர்ப்போம்.

அழகிய பெண்களிடம் மையல் கொள்ளாமல், சிவனை அறியும் பக்குவத்தைப் பெறுவதற்கு அருள்பாலிங்கின்ற அருட்குன்றே. உனது இதமான துணைவன் ஆகி, என் உயிருக்கும் துணையாகிய சிதம்பர ஞானதேசிகரின் செம்பொன் சிவந்த அடிகளைத் தலையில் வைத்துத் துதிப்போம்.

இவ்வாறு முதல் மூன்று மடாதிபதிகளுக்கும் பாடல் பாடிய சிறப்புக்குரியவர்.

தான் கண்ட, அறிந்த மடம் சார்ந்த செய்திகளைக் கவிதையாகப் படைத்தவர் பழனியப்பையா அவர்கள். இவர் பாடியதாக 10 நூல்கள் சொல்லப்படுகின்றன.

1. வெயிலுகந்த விநாயகர் பதிகம்
2. பழனிமலை செட்டியார் மாலை
3. கல்லுளி மாலை
4. பொன்மாரி அந்தாதி
5. சீரலைவாய்ப் பதிகம்

6. பழனிப் பதிகம்

7. விடுதிக் கவிகள்

8. தோத்திரப் பாமாலை

9. தனிப்பாடல்கள்

10. ஆண்டவர் முத்துராமலிங்க ஞானதேசிகர் சரித்திரம்

இவற்றுள் விடுதிக் கவிகள் (7) வரையிலான பாடல்கள் அனைத்தும் தொகுக்கப்பட்டு நூலாக வெளியிடப்பட்டுள்ளது. இந்நூல் 1898–ல் பதிப்பிக்கப்பட்டுள்ளது. மதராஸ் ரிப்பன் அச்சுக் கூடத்தில் பதிப்பிக்கப்பட்டுள்ளது.

மடத்தின் சீடராகிய ஒய்யக்கொண்டான் சிறுவயல், முரு.அள. சுப்பிரமணியஞ் செட்டியார் அவர்களால் பதிப்பிக்கப்பட்டுள்ளது. தஞ்சாவூர் சதாவதானம் சுப்பிரமணிய ஐயர் அவர்களால் பரிசோதிக்கப்பட்டு பதிப்பிக்கப்பட்டுள்ளது.

முதல் தலைப்பாக உப்பூர் வெயிலுகந்த விநாயகர் பதிகம் அமைகிறது. பதிகம் என்பதால் 10 பாடல்களைக் கொண்டுள்ளது. எண்சீர் விருத்தமாகப் பாடல்கள் அமைந்துள்ளன.

ஆர்.எஸ். மங்களம் அருகே உள்ள சிற்றூர் உப்பூர். அங்கு இருந்து அருள்பாலிப்பவர் வெயிலுகந்த விநாயகர். வெயிலுக்கு உகந்த விநாயகர் என்பதே மருவி வெயிலுகந்த விநாயகர் என அழைக்கப்படுகிறார். கதிரவனின் ஒளி எப்பொழுதும் விநாயகரின் திருமேனி மீது படுவதால் இப்பெயர் பெற்றதாகக் கூறப்படுகிறது.

இப்பத்துப் பாடல்களின் ஒவ்வொரு வரியிலும் விநாயகப் பெருமானைப் போற்றுகிறார். பெண்களின் மீதான மையலை நீக்குமாறு வேண்டுகிறார். அப்பாடல்களில் சிறந்த சில வரிகள் உங்கள் பார்வைக்கு.

“ஈனமின்னார் மையல் கொண்டு நைந்தேன் தன்னை

இனியேனும் இரட்சிக்க வேண்டும் போற்றி!”

(ஈனம் – குறைபாடு, மின்னார் – அழகிய பெண்கள்)

“இன்னலுற்றே இதுகாறும் நைந்தேன் தன்னை

இரட்சிக்க இனியேனும் இரங்கு போற்றி!”

“கம்பலை எல்லாம் தீர்த்தே இனிமேலேனும்

கடாட்சிப்பாய் போற்றி சிந்தாமணியே போற்றி!”

(கம்பலை – தும்பம்)

“விரைமலர்த் தார்க்குழல் மகளிராசை நீக்கி

விரத்தி எனும் விழுச் செல்வம் தந்து அருள்வாய் போற்றி!”

(விரத்தி – பற்றின்மை)

“குற்றமதே யான்செயினும் குணமாக் கொண்டு

கோதுகலத் திருக்கருணை கூர்வாய் போற்றி”

(கோதுகலம் – உள்ளக்களிப்பு)

“கொற்றவனே போற்றி! குணக்குன்றே போற்றி!

குரவனே போற்றி! குறை தீர்ப்பாய் போற்றி!

உற்றதுணை நீயன்றி வேறு முண்டோ

உப்பூர்வாழ் வெயிலுகந்த கணேசா போற்றி!

வெயிலுகந்த விநாயகரை இவ்வாறு வேண்டிய பழனியப்பையா, அடுத்த நூலான பழனிமலைச் செட்டியார் மாலையில், பல வரலாற்றுச் செய்திகளைச் சொல்லிச் செல்கிறார். அதனை அடுத்த இதழில் காண்போம்.

# காரைக்காலம்மையாரின் அற்புதத் திருவந்தாதி பாடல் நலம்

## எல்லாம் அருளே



- வாகீச கலாநிதி கி.வா. ஜகந்நாதன்

இறைவனுடைய திருவருள் பெற்றவர்கள் எல்லா வகையான நன்மைகளையும் பெறுவார்கள்."இம்மையே தரும். சோறும் கூறையும், ஏத்தலாம்; இடர் கெடலும் ஆம், அம்மையே சிவலோகம் ஆள்வதற்கு யாதும் ஐயுறவில்லையே"? என்பார் சுந்தரமூர்த்தி நாயனார். இம்மை மறுமை, வீடு என்று மன்று நிலை, இந்த உலக வாழ்வு இம்மை. அதிலும் எல்லாப் போகங்களையும். பெறலாம்;. மறுமை. எனபது இப்பிறவியின் பின் வரும் வாழ்வு அப்போது சொர்க்கபோகம் பெறலாம். அதற்குமேல் முத்தியின்பத்தைப் பெறலாம். இறைவன் அருள் இருந்தால் இந்த உலகத்தை ஆளும் மன்னவனாக இருக்கலாம்; பிறகு தேவருலகத்தை ஆளும் இந்திரனாகலாம்; பிரமலோகம் முதலியவற்றை ஆளும் பதவி பெறலாம். இத்தனையும் செய்வது இறைவன் திருவருள்.

"அருளே உலகெலாம் ஆள்விப்பது."

இகலோகத் தலைமையையும் பிறலோகத் தலைமையையும் தரும் அந்த அருள். பிறகு பிறப்பை அறுத்து மோட்சம் பதவியைத் தரும்.

"ஈசன் அருளே பிறப்பறுப்பது. "

உலகத்தில் இறைவன்.திருவருளைப் பெற எண்ணுகிறவர்கள். இரண்டு. வகையினர். ஒருவகையினர் பதவியை விரும்புகிறவர்கள்; _'காம்யார்த்தமாகப் பக்கி. பண்ணுகிறவர்கள் மற்றொரு வகையினர். பிறப்பை அறுத்து வீட்டின்பம். பெறவேண்டி. இறைவன் திருவருளை நாடுகிறவர்கள்..

இறைவன் அருளால்தான் இந்த நலங்களெல்லாம் கிட்டும்,. அவன். அருள் இல்லாவிட்டால். ஆளும் பதவி கிட்டாது... அதுதான் எல்லாவற்றையும் ஆள்விப்பது; முக்தியைத். தருவதும் அதுதான்.

இப்படித்தான் எல்லோரும் சொல்கிறார்கள்;. . நல்ல அநுபவம் உண்டானால் . நன்மை உண்டாகும், ஏதேனும் ஊதியம் இடைத்தால், அது இறைவன் திருவருளால் உண்டானது என்று அன்பர்கள் எண்ணுகிறார்கள்‘. ஆனால் காரைச்காலம்மையார் மனப்பான்மையோ வேருனது,

பக்தர்கள் தமக்குத் துன்பம் உண்டானால், “இறைவன் அருள் நமக்குக். கிடைக்கவில்லை” என்று. எண்ணுவார்கள். யாரேனும் துன்புறுத்தினால், “இறைவன் திருவருள் துணை இல்லாததனால் வந்த விளைவு” என்று நினைப்பார்கள், இன்பம் வருவது அருளால் என்றும்; துன்பம் வருவது தம் விணையால் என்றும் நினைத்து அழுங்குவார்கள்.

காரைக்காலம்மையார் அப்படி நினைப்பவர். அல்ல. அவர் இறைவனுடைய அருளையே துணைக்கொண்டு மெய்ப்பொருளை ஆராயும் நியமம் உடையவர். “எப்பொருள் எத்தன்மைத். தாயினும் அப்பொருள், மெய்ப்பொருள் காண்ப தறிவு” என்றபடி அருளாலே எவற்றையும் பார்க்கிறவர். அறிவாலே. பார்ப்பது ஒன்று; அருளாலே பார்ப்பது வேறு ஒன்று, அறிவாலே பார்ப்பவர்க்கு வழி மட்டும் தெரியும் அதற்கு மேல் அருளாலே பார்ப்பவர்களுக்கு அநுபவம் உண்டாகும்,

அருளாலே எவையும்பார் என்றான் அத்தை.
அறியாதே கட்டிஎன் அறிவாலே பார்த்தேன்.
இருளான பொருள்கண்ட தல்லால்கண்ட
என்னையும் கண்டிலன் என்னேடி தோழி”

என்பார் தாயுமானவர். அருட்கண்ணால் நோக்காதார் அல்லாதாரே”” என்பது அப்பர் திருவாக்கு.

காரைக்கால் அம்மையார் அறிவால் ஆராரயும் நிலை கடந்து, ஆண்டவன் அருளாலே எது மெய்யான பொருள் என்று நோக்கும் நிலையைப் பெற்றவர். அதுவே வியாதியாக நியமமாக உடையவர். அவர் இறைவன் அருளை இவ்வாறு காண்கிறார்.

அழகுள்ள இடத்தில் ஆண்டவன் அருள் நிரம்பியிருக்கிறது, என்று நாம் நினைக்கிறோம். இன்பம் உள்ள இடத்தில் ஆண்டவன் “திருவருள் உள்ளதென்று சொல்கிறோம். அழுக்கான இடத்தில் ஆண்டவன் அருள் இல்லை என்கிறோம். அவன் வாழ்வு உள்ளவரை ஆண்டவன் அருளற்றவர் என்று கருதுகிறோம்.

நமக்கே துன்பம் வரும்போது இறைவன் அருள் செய்யவில்லையே என்று வருந்துகிறோம்,

காரைக்காலம்மையார் எப்போதும் எந்தப் பொருளிலும் எந்த அநுபவத்திலும் எந்த நிகழ்ச்சியிலும் அருளையே பொர்க்கிறார். அது எப்படி?

எல்லாம் அவன் வடிவம், எல்லாம் வன் செயல் என்று. உணரும்

நிலையை அடைந்தவர்களுக்கு. எல்லாம் இறைவன் அருள் விளையாட்டு என்ற அநுபவம் கிடைக்கும் தமக்கு இன்பம் உண்டாகும்போது. இறைவன் அருட்பிரசாதம் என்று மகிழ்வது போலவே, துன்பம் உண்டாகும்போதும் அதுவும் இறைவன் அருட் பிரசாதம் என்றே எண்ணுவார்கள். கணவன் காலால். உதைத்தால் அவன். காலின் பரிசம் கிடைத்ததே. என்று மகிழும் கற்புக்கரசி போன்றவர்கள் இந்த நிலையில் உள்ள பக்தர்கள், துன்பம் வந்தால், இறைவன் நம்மைத் தூய்மைப் படுத்த நல்கிய மருந்து என்று கொள்வார்கள். நோய் உள்ளவன் மருத்துவன் தரும் மருந்தை, விலை உயர்ந்தது, நன்மை தருவது என்று எண்ணி உண்ணுவதுபோல, துன்பங்களையும் இறைவன் அருளால் விளைந்தவை என்று கொள்வது முறுகிய . அன்புடையார் இயல்பு.

"இடும்பைக் கடும்பைப் படுப்பர் இடும்பைக்கு

இடும்பை படாஅ தவர்"

என்று திருவள்ளுவர் சொல்கிறார். துன்பங்களை . மன மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொள்கிறவர்கள் அந்தத் துன்பத்துக்கே துன்பத்தைத் .. தருவார்கள். அத்தகைய .திண்ணமான மனம் எப்படி வரும்? இறைவன் திருவருட் சார்பாலே யாயற்றையும். காணுபவர்கள் அந்த நெஞ்சத் திண்மையைப் பெறுவார்கள். "இதை அம்மையார் சொல் கிருர்.

"அருளாலே

மெய்ப்பொருனை நோக்கும் விதியுடையேன்,;

எஞ்ஞான்றும்

எப்பொருளும் ஆவது எனக்கு."

எல்லாம் கடவுள் மயம் என்று பார்க்கும் திவ்ய தரிசனத்தைப் பெற்றவர் அம்மையார், ஆதலின். அவர் அபேதமான . காட்சியையே அபேத அநுபவத்தையே பெறுகிறார். எல்லாம் அருள் மயமாகப் பார்க்கிறார்.

"அருளே உலகெலாம் ஆள்விப்ப(து), ஈசன்

அருளே பிறப்பறுப்பது ஆனால் அருளாலே

மெய்ப்பொருளை நோக்கும் விதியுடையேன்,

எஞ்ஞான்றும். 'எப்பொருளும் ஆவ(து) எனக்கு."

[பிறருக்கெல்லாம் சிறந்த பதவிகளைக் கொடுத்துப் பலவகை உலகங்களை ஆன்விப்பது இறைவன் அருளே; அந்த அருளே பிறப்பை அறுத்து முத்தி தருவது; ஆனால் நானோ... அவன் அருளாலே உண்மையான .பொருளைக் காணும் நியமத்தை உடையவள், ஆதலால் அவன் அருளே, எனக்கு எல்லாக் காலத்தும் எல்லாப் பொருளும் ஆவது.

மற்றையோர் அருளைத் தெரியும் . முறை வேறு . அம்மையார் தெளிந்தது வேறு, எல்லாம் இறைவன் என்று. காணுவாருக்கு எல்லாம், அருளினால் விளையும் விளைவு, எல்லாம் இன்பந்தருவன என்ற. நிலை. உண்டாகும். "இன்பமே எத்தாளும் துன்பம் இல்லை" என்ற நிலை அது,

இந்தப் பாடல் அற்புதத் திருவந்தாதியில் ஒன்பதாவது. பாட்டு.

# விழிப்புணர்வைப் போதித்த அஷ்டவக்கிரர்



தேனம்மை இலக்குமணன்,
காரைக்குடி

ஒரு மனிதரின் வெளிப்புறத் தோற்றத்தை வைத்து நாம் அவரை எடைபோடுகிறோம். அவருடைய ஞானம், தகுதிகள் ஆகியவற்றை அறியாமல் இத்தவறைப் பெரும்பாலோர் செய்கிறார்கள். தந்தையின் தவறைத் திருத்தியதால் எட்டுக் கோணல்களுடன் பிறந்து பின்பு சாபவிமோசனம் பெற்றுத் தன் தந்தையையும் காத்த முனிவர் பற்றி அறிந்து கொள்வோம்.

உத்தாலக ஆருணி என்ற வேத முனிவருக்கு சுவேதகேது என்ற மகனும் சுஜாதா என்ற மகளும் இருந்தார்கள். வேதம் கற்பிக்கும் பள்ளியை நடத்தி வந்தார் உத்தாலகர். இப்பள்ளியில் பயின்று வந்தார் கஹோடர். இவருக்குத் தன் மகள் சுஜாதாவை மணம் முடித்துக் கொடுத்தார் உத்தாலகர்.

திருமணமானதும் கர்ப்பமுற்றாள் சுஜாதா. அவளும் வேதப் பயிற்சியில் சிறந்தவள் என்பதால் கருவில் இருக்கும் குழந்தை அவள் வேதம் ஓதுவதைக் கேட்டுச் சரியான உச்சரிப்பைப் பாராயணம் செய்து கொண்டது. ஒருமுறை கஹோடர் வேதம் ஓதும்போது ஒரிரு இடங்களில் தப்பும் தவறுமாக ஓதுவதைக் கேட்ட அக்குழந்தை கர்ப்பத்திலிருந்தே அவரது தவறான உச்சரிப்பைத் திருத்தியது. கோபமுற்ற கஹோடர் அக்குழந்தை எட்டுக் கோணல்களுடன் பிறக்கும்படிச் சாபமிட்டார்.

குழந்தை அஷ்டவக்கிரன் பிறந்த சில காலத்துக்குப் பின் வாழ்வாதாரத்துக்குப் பொருள் வேண்டி கஹோடர் விதேகதேசம் சென்றார். அங்கே ஜனகரின் அவையில் வந்தின் என்ற முனிவரின் விவாதங்களுக்குக் கஹோட முனிவரால் பதில் அளிக்கத் தெரியாமல் தோற்கடிக்கப்பட்டு நீரில் மூழ்கடிக்கப்பட்டார்.

இது நிகழ்ந்து பன்னிரெண்டு ஆண்டுகளுக்குப் பிறகு அஷ்டவக்கிரர் விதேக தேசம் சென்றார். அங்கே யாகமும் ஹோமமும் இன்னும் தொடர்ந்து நடந்து கொண்டிருந்தன.

அச்சமயம் ஜனகர் தொடர் துர்க்கனவுகளால் அவதிப்பட்டுக் கொண்டிருந்தார். கனவில் அவர் பிச்சைக்காரராகக் கடுமையாகத் துன்புறுவது போல் தோன்றும். விழித்தபின் தான் மன்னர் என்பதை உணர்வார். இதில் எது உண்மை என்பதை உரைக்கவேண்டும் என



அவர் தன் சபை முன் கேள்வியாக வைத்தபோது யாருக்கும் பதில் சொல்லத் தெரியவில்லை.

தன் தந்தை தனக்களித்த சாபம் பற்றியும் ஜனகரின் அவையில் தன் தந்தை வாதப் போரில் தோற்று நீரில் மூழ்கடிக்கப்பட்டது குறித்தும் தாய் மூலம் அறிந்த அஷ்டவக்கிரர் ஜனகரின் அவையை அடைந்தார்.

எட்டுக் கோணல்களுடன் கூடிய உடலமைப்புடன் சென்ற முனிவரைப் பார்த்து ஜனகனின் அவையே சிரித்துக் கூத்தாடியது. கோபமுற்ற முனிவர்,"மன்னா உம் கேள்விக்குப் பதில் நான் தருகிறேன். ஆனால் இந்தத் தோல் வியாபாரிகளையும், கசாப்புக் கடைக்காரர்களையும் வெளியேற்றுங்கள்" என்று கூறினார். கொந்தளித்த சபை ஆட்சேபம் தெரிவித்தது. மன்னர் "அஷ்டவக்கிரரே, ஏன் இவ்வாறு கூறுகிறீர்கள். இது பண்டிதர்கள் நிறைந்த சபை" என்று பதிலளித்தார்.

"ஒருவரின் உடலின் வெளிப்புறத் தோற்றத்தையும் தோலையும் பார்த்து எடைபோடும் இவர்கள் தோல் வியாபாரிகள் மற்றும் கசாப்பு கடைக்காரர்கள்தானே " என்று சாடினார் அஷ்டவக்கிரர். அவமானம் அடைந்த அப்பண்டிதர்கள் அவையை விட்டு வெளியேறினார்கள். பின்னர் அஷ்டவக்கிரர் மன்னரிடம்," கனவில் பிச்சைக்காரனாக இருப்பதற்கு வருந்துவது, விழித்தவுடன் ராஜாவாக இருப்பதற்கு மகிழ்வது என இருக்காதே. இரண்டையுமே சமமாகக் கருதக் கற்றுக் கொள். உன் இதயத்தை எப்போதும் உயர்ந்த விழிப்புணர்வோடு வைத்திரு" என்று போதித்தார். இது அஷ்டவக்கிர கீதை எனப்படுகிறது. இதைக் கேட்டு ஜனகர் தெளிவடைந்தார்.

மேலும் அஷ்டவக்கிரர் ஜனக மகாராஜாவிடம்,"ஏகாதிபதிகளில் மிகச் சிறந்த மன்னரே, இச்சபையில் வந்தின் என்பவனுடன் நான் வாதப்போர் புரிய வந்துள்ளேன். அவன் எங்கிருக்கிறான் ? அவனை என் முன்னிலையில் கொண்டு வரும்படிச் செய்யுங்கள்" என்று கூறினார். இதைக் கேட்டதும் அஷ்டவக்கிரர் முன்பு வந்த வந்தின் "நெருப்பு, சூரியன், இந்திரன், யமன்

ஆகியோர் ஒருவரே" என்று அவர்களின் பராக்கிரமத்தைப் பற்றிக் கூறினான்.

அதற்கு மறுமொழியாக அஷ்டவக்கிரர் இரண்டின் சிறப்பைப் புலப்படுத்தும் வண்ணம் " இந்திரன் – அக்னி, நாரதர் – பர்வதர், அசுவினி குமாரர்கள், கணவன் மனைவி ஆகியவர்கள் தெய்வீக இணைகள்" என இருவர் சிறப்பைக் கூறினார். இதைக்கேட்டு வந்தின் மூன்றின் சிறப்பாக சொர்க்கம் நரகம் பூமி மற்றும் சூரியன் சந்திரன் நெருப்பைப் பற்றிக் கூற அஷ்டவக்கிரரோ நான்கின் சிறப்பாக நான்கு திசைகள், வர்ணாசிரமம் பற்றிக் கூறுகிறார்.

தொடர்ந்து வந்தின் வேள்விகள், நதிகள் ஐந்து என்று கூற, அஷ்டவக்கிரரோ வேள்விக்கொடையாக ஆறு பசுக்கள், பருவங்கள் ஆறு, புலன்கள் ஆறு என அடுக்குகிறார். வீணையின் தந்திகள் ஏழு, சப்தரிஷிகள் ஏழு என வந்தின் கூற அஷ்ட வசுக்கள், சரபத்தின் கால்கள் எட்டு எனக் கூறுகிறார் அஷ்டவக்கிரர். கணக்கில் ஒன்பது என்ற எண்களே உள்ளன என்று வந்தின் கூற ஞானாசிரியர்கள் பத்து, பெண்கள் கருச்சுமக்கும் காலம் பத்து என அஷ்டவக்கிரர் பதில் அளிக்கிறார்.

விடாமல் வந்தின் ருத்திரர்கள் பதினோரு பேர் என்று கூற அஷ்டவக்கிரரோ ஆதித்தியர்கள் பன்னிருவர் எனப் புகல்கிறார். திரியோதசி எனப்படும் பதிமூன்றாவது நாள் சிறப்பு பதிமூன்று தீவுகள் உள்ளன என்று கூறிய வந்தின் பாதியில் நிறுத்திவிட, அஷ்டவக்கிரர் தொடர்ந்து கேசியால் பதிமூன்று வேள்விகள் செய்யப்பட்டன. வேதத்தின் அதிச்சந்தங்களால் பதிமூன்றும் விழுங்கப்பட்டன என்று மீதி சுலோகத்தைச் சொல்லி முடிக்கிறார்.

இதைக் கேட்டு வந்தின் தோல்வியால் தலை குனிய அஷ்டவக்கிரரோ தன் தந்தையை முன்பு வாதப்போரில் ஜெயித்து வந்தின் நீரில் மூழ்கடித்ததைப் போல வந்தினையும் நீரில் மூழ்கடிக்க வேண்டும் என்று மன்னரிடம் கேட்கிறார். அப்போது நீரில் மூழ்கிய அஷ்டவக்கிரரது தந்தை கஹோடர் இன்னும் பதினோரு முனிவர்களுடன் அங்கே தோன்றுகிறார். வந்தினோ தன் தந்தை வருணன் செய்து வந்த யாகத்துக்கு வேதம் ஓத அவர்களை நீரில் மூழ்கடித்து அனுப்பியதாகவும் இப்போது யாகம் முடிந்து திரும்பப் பெற்றதாகவும் கூறுகிறான். அஷ்டவக்கிரர் கேட்டுக்கொண்டதுபோல் வந்தின் நீரில் மூழ்கித் தன் தந்தை வருணனை அடைகிறான்.

அஷ்டவக்கிரருடன் ஆசிரமம் திரும்பிச் சென்ற கஹோடர் தன் மனைவி சுஜாதாவின் முன்னிலையில் சமங்கா நதியில் இறங்குமாறு பணிக்கிறார். தந்தையின் ஆணைக்கு ஏற்ப அஷ்டவக்கிரர் சமங்கா நதியில் மூழ்கி எழ அவரின் அஷ்டகோணலான உடல் உறுப்புகள் அனைத்தும் சீராகின. அவர் தன் தந்தை தனக்களித்த சாபவிமோசனம் விலகி முழுமையான மனிதராக மேலெழுந்து வந்து தன் பெற்றோரை வணங்கினார். ஜனக மன்னருக்கு விழிப்புணர்வைப் போதித்தது மட்டுமல்ல தன் தந்தையையும் நீரிலிருந்து மீட்டெடுத்த அஷ்டவக்கிரர் தன் மனத்தின்மைக்காகவும், ஞானத்தெளிவுக்காகவும் போற்றப்பட வேண்டியவர் என்பது உண்மை.

# சிவாலயங்களின் சிறப்புகள் - 6



**வே.இராமசாமி,** B.Com.F.C.A.,
Chartered Accountant
பலவான்குடி

சிவனேச செல்வர்களுக்கு பணிவான வணக்கங்கள்.

சிவாலயங்களின் சிறப்புகளை மாதம் ஒரு திருக்கோயில் என எழுத இருக்கிறேன். இந்தத் தகவல்கள் கோயிலின் ஆலய குறிப்புகளில் இருந்தும் கோயில் குருக்கள் சொல்வதை வைத்தும் எழுதி எழுதியுள்ளேன்.

## திருவாரூர்

(பகுதி-1)

தேவாரப் பதிகங்களில் ஆரூர் என்று அழைக்கப்படுகிறது. பிற்காலத்தில் திரு சேர்க்கப்பட்டு திருவாரூர் ஆனது தஞ்சாவூரில் இருந்து சுமார் 40 கிமீ தொலைவிலும், மயிலாடுதுறையில் இருந்து சுமார் 37 கிமீ தொலைவிலும் அமைந்துள்ளது.

தரிசன நேரம்
காலை 06:00 am – 12:00 pm &
மாலை 04:00 pm - 08:30 pm

கோயிலின் தொடர்புக்கு
04366242343,
9443354302.



இக்கோயில் நாயன்மார்களால் பாடல் பெற்ற தலங்களில் ஒன்றாகவும், பஞ்சபூதத் தலங்களில் பிருதிவித் தலமாகவும் உள்ளது. தேவாரப் பாடல் பெற்ற தலங்களில் சோழ நாடு காவிரி

தென்கரைத் தலங்களில் அமைந்துள்ள 87ஆவது சிவத்தலமாகும். சப்தவிடத் தலங்களில் ஒன்றாக அமைந்துள்ளது

சுவாமியின் பெயர்: வன்மீகநாதர், புற்றிடங்கொண்டார், மூலட்டான முடையார், பூங்கோவில் புண்ணியனார்

உற்சமிவர்களின் பெயர்: தியாகராஜர், வீதிவிடங்கர், தேவரகண்டப்பெருமான், தியாகப்பெருமான், ஆடரவக்கிண் கிணிக்காலழகர், செங்கழுநீரழகர், செவ்வந்தித்தோடழகர், கம்பிக்காதழகர், தியாகவிநோதர், கருணாகரத் தொண்டைமான், அசைந்தாடும் அப்பர், அடிக்காயிரம் பொன் வழங்கியவர், கமலேசர், செம்பொன் தியாகர், தேவசிந்தாமணி, தியாகசிந்தாமணி

அம்மன் பெயர்: அல்லியம்பூங்கோதை (நீலோத்பலாம்பாள்), கமலாம்பிகை

உற்சவ அம்மனின் பெயர்: அல்லியங்கோதை

தீர்த்தங்கள்: கமலாலயம், சங்கு தீர்த்தம், கயா தீர்த்தம், வாணி தீர்த்தம்

புராண பெயர்(கள்): க்ஷேத்ரவரபுரம், ஆடகேசுரபுரம், தேவயாகபுரம், முசுகுந்தபுரம், கலிசெலா நகரம், அந்தரகேசுபுரம், வன்மீகநாதபுரம், தேவாசிரியபுரம், சமற்காரபுரம், மூலாதாரபுரம், கமலாலயபுரம்

## திருவாரூரின் சிறப்புகள்

1.சப்தவிடத் தலங்களில் திருவாரூர் முதன்மையான ஸ்தலமாக விளங்குகிறது

2.அனைத்து சிவ ஸ்தலங்களிலும் தேவாரம் பாடி முடித்ததற்கு பிறகு திருச்சிற்றம்பலம் என்று சொல்லி நிறைவு செய்வார்கள். திருவாரூர் சிதம்பரத்திற்கு முந்திய தலம் என்பதால் இங்கு தேவாரம் பாடி முடித்த பிறகு திருச்சிற்றம்பலம் என்று வார்த்தையை பயன்படுத்துவதில்லை

3. திருவாரூர் கோயிலில் 86 விநாயகர் உள்ளார்கள்

4. வருடத்தில் 365 நாட்களை குறிக்கும் விதமாக 365 லிங்கங்கள் இங்கு உள்ளன

5. திருவாரூரில் பிறந்தால் முக்தி என்று சொல்வார்கள். எனவே இங்கு எமனுக்கு வேலை கிடையாது. அதனால் எமதர்மராஜா சிவனிடம் வேண்டி இங்கு சண்டிகேஸ்வரராக அமர்ந்து உள்ளார்

6.அனைத்து சிவ ஸ்தலங்களிலும் சிவபெருமானுக்கு முன்பு நந்தி அமர்ந்த கோலத்தில் இருப்பார். ஆனால் திருவாரூரில் மட்டும் நந்தியம் பெருமாள் நின்ற கோலத்தில் காட்சி தருவார்

7. இங்கு நவக்கிரகங்கள் அனைத்தும் வடமேற்கு மூலையில் ஒரே வரிசையில் தியாகராஜருக்கு கட்டுப்பட்டு நின்றபடி காட்சி தருகிறார்கள்

8.கர்நாடக சங்கீத மும்மூர்த்திகளும் தோன்றிய தலம்

9. நமி நந்தியடிகள் தண்ணீரில் விளக்கேற்றிய தலம்

10.பசுவிற்கு நீதி வழங்க தன் மகனை தேர் சக்கரத்தில் இட்டு கொன்ற நீதி வழுவா மனுநீதிச் சோழன் வாழ்ந்த தலம்

11. பஞ்சபூத ஸ்தலங்களில் பூமிக்கான திருத்தலமான திருவாரூர் திருக்கோவில் காமிகாகம முறை பின்பற்றப்படுகிறது

12. சுந்தரருக்காக (நால்வரில் ஒருவர் ) சிவனே வீதியில் நடந்துசென்று பெண் கேட்ட திருத்தலம். நட்பின் முக்கியத்தை உணர்த்த சுந்தரருக்கு தனி இடம் தந்த

திருத்தலம்

13. திருவாரூர் கோவில் அளவும், தெப்பக்குளமும் ஒரே அளவு கொண்டதாகும்

14 இத்தலத்தில் சாயரட்சை வழிபாட்டின்போது தேவேந்திரனே வந்து பெருமானைப் பூசிப்பதாக ஐதீகம். ஆதலால் தியாகேசருக்கு யோக வேஷ்டி தரித்து நயனார் பூசை செய்வர்.

15. ஆசியாவிலேயே மிகப்பெரிய தேர் திருவாரூர் தேராகும்

16. திருவாரூரில் தியாகராஜரின் முக தரிசனம் காண்பவர்கள், 3 கி.மீ. தொலைவிலுள்ள விளமல் சிவாலயத்தில் பாத தரிசனம் காண்பது சிறப்பு.

17. இக்கோவில் 9 இராஜகோபுரம், 80 விமானம், 12 உயர மதில்கள் , 13 மண்டபங்கள், 15 தீர்த்த கிணறுகள், 3 தோட்டம், 3 பிரகாரம் என பிரமாண்டமான கட்டட அமைப்பாகும். 24 உட்கோவில்களையும், 365 சிவலிங்ககளையும், 86 விநாயக சிலைகளையும் கொண்ட திருத்தலம் திருவாரூர் ஆகும்

18. திருப்பதியைப் போன்று திருவாரூர் தியாகராஜர் கோவில் கருவறை கோபுரமும் தங்கத்தால் செய்யப் பெற்றது. தங்கம் காலப் போக்கில் பலரால் அழிக்கப்பட்டுள்ளது. இன்று மிச்சம் இருப்பது கற்கோவில் மட்டுமே.

19. சுந்தரருக்கு அடியார்களின் பெருமையை விளக்கி அவர் திருத்தொண்டத் தொகை பாடுவதற்குக் காரணமான தலம்

20. சுந்தரரின் மனைவியருள் ஒருவரான பரவை நாச்சியார் பிறந்த தலம்

21.கமலை என்னும் பராசக்தி தவம் செய்யும் தலம்

22. திருமகள், ராமர், மன்மதன் முதலியோர் வழிபட்ட தலம்

23. முசுகுந்த சோழன் ஆட்சி செய்த தலம்

24. திருமகள் வழிபட்டு மாங்கல்யம் அருளப்பெற்ற தலம்

25. சுந்தரர் தனது இரண்டாவது கண்ணில் பார்வை பெற்ற தலம்

26. தேவாரப்பாடல் பெற்ற தலங்களில் இத்தலம் தான் மிக அதிகமாக 353 பாடல்களைப் பெற்றுள்ளது. சம்பந்தர் 55 பாடல், அப்பர் 208 பாடல், சுந்தரர் 87 பாடல், மாணிக்கவாசகர் 3 பாடல்கள் பாடியுள்ளனர்.

27. திருவாரூர் சிவன் சன்னதி பிரகாரத்தில் வீணை இல்லாத சரஸ்வதியை தவக்கோலத்தில் காணலாம். இவர் சிவனை நோக்கி தவமிருக்கிறார்

## தியாகேசருக்கு உரிய அங்கப்பொருள்கள்

1. ஆடுதண்டு மாணிக்கத்தண்டு,
2. கொடி தியாகக்கொடி
3. ஆசனம் இரத்தின சிம்மாசனம
4. மாலை செங்கழுநீர்மாலை
5. வாள் வீரகட்யம் ஞானகட்யம்
6. நடனம் அஜபா நடனம்
7. யானை அயிராவணம்
8. மலை அர்தன சிருங்கம்
9. முரசு பஞ்சமுக வாத்தியம்
10. நாதஸ்வரம் பாரி

11. மத்தளம் சுத்தமத்தளம்

12. குதிரை வேதம்

13. நாடு சோழநாடு

14. ஊர் திருவாரூர்

15. ஆறு காவிரி

16. பண் பதினெண்வகைப்பண்

17. தோழர் நம்பி ஆரூரர் (சுந்தரர்) என்பன இவையாவும் ஆரூர் என்ற இத்திருவாரூர் பெருமானுக்குரிய அங்கப்பொருள்களாகும்.

தியாகேசப் பெருமான் இராஜாதி ராஜர் ஆதலின், அவர் தனியாக வீதிகளில் எழுந்தருள்வதில்லை; அவருடன் 1. அருளிப்பாடியார், 2. உரிமையில் தொழுவார், 3. உருத்திரப் பல்கணத்தார், 4. விரிசடை மாவிரதிகள், 5. அந்தணர்கள், 6. சைவர்கள், 7. பாசுபதர்கள், 8. கபாலியர்கள் ஆகிய எட்டு கணங்கள் சூழ வருவார்

## திருவாரூர் கோயிலின் அமைப்பு

### 1.இந்திர மண்டபம் :

கீழராஜ கோபுரத்திற்கு எதிரே உள்ள திருமண்டபம். ஆழித்தேருக்கு தியாகேச வள்ளல் எழுந்தருளுங்கால் சத்யோஜாத முகமாக ஆடும் பேரு பெற்ற மண்டபம்.

### 2.தட்டஞ்சுற்றி மண்டபம்:

தியாகேச வள்ளல் கிருஷ்ணகாந்த சாயரட்சை கண்டருளும் இடம். வல்லப கணபதி பிரதிஸ்டை செய்யப் பெற்றுள்ளார்.

### 3.உத்திர பாத மண்டபம்:

பங்குனி உத்திர நன்னாளில் வீதி விடங்கர் தனது வலப்பாதத்தைக் காட்டி அருளும் திருமண்டபம். சபாபதி மண்டபம் என்று தற்போது அறியப்படுகிறது.

### 4.தேவாசிரியன் மண்டபம்:

ஆரூர் பெருமை பகரும் மண்டபம். ஸ்வஸாமி மித்ரர் (சுந்தரர்) திருத்தொண்டத் தொகை பாடியருளிய மண்டபம்.

### 5.இராஜநாரயண மண்டபம்:

திருவாதிரை மகாபிஷேகம் கண்டருளி தியாகேசர் வலப் பாத தரிசனம் அருளும் இடம்.

**6.சுந்தரர் மண்டபம்:** தியாகேச வள்ளலின் திருமந்திரப் பிரசாதம் (திருநீறு) தயாரிக்கும் மேலான இடம்.

### 7.கமலாம்பிகை மண்டபம்:

கமலாம்பிகை சன்னதிக்கு எதிரே உள்ள முகமண்டபம் ஆகும். உச்சிஸ்ட கணபதி பிரதிஸ்டை செய்யப்பட்டுள்ளார்.

### 8.சந்திரசேகரர் மண்டபம்:

தியாகேச புராணத்தை எடுத்துரைக்கும் சிற்பத்தொகுதியைக் கொண்ட மண்டபம். 15 பிரிவுகளாக இச்சிற்பத் தொகுதியினைப் பகுக்கலாம்.

திருவாரூர்க் கோயிலுக்குள் சென்றுவிட்டால் ஏராளமான சந்நி திகள் இருப்பதால் குவித்த கரங்களை விரிப்பதற்கு வழியே இல்லையெனலாம்

சுவாமி சன்னதியின் முதல் பிரகாரத்தில் அருள்பாலிக்கிறார் வாதாபி கணபதி. இந்த விநாயகர் முன்பு நின்று தான், திருவாரூர் முத்துசுவாமி தீட்சிதர் “வாதாபி கணபதிம்‘ எனத் தொடங்கும் பாடலை பாடினார்.

அம்மன் சன்னதியின் உள்பிரகார விநாயகர் சன்னதியில், ஐயப்பனும் அருள்பாலிக்கிறார்.

*(தொடரும்)*

# பெரியபுராணக் கதைக் களம்

அன்பர்களே !

தொண்டர்தம் பெருமை அளவிடற்கு அரியது. அவர்களின் அருள் வரலாறு நம்மை நல்வழியில் நடத்தும். திருநெல்லையின் இவ்விதழில் புதுமை இணைப்பாக பெரியபுராணத்தில் இடம்பெற்றுள்ள அறுபத்து மூன்று அருந்தொண்டர் கதைகள் ஒவ்வொன்றாக காதுகளுக்கும், கண்களுக்கும் மனதிற்கும் இன்பம் சேர்க்கும் வகையில் கதைவடிவில் ஒளிபரப்பாகிறது. கேட்டு, உணர்ந்து அனுபவித்து மகிழுங்கள்.

---



# காரைக்குடி கம்பன் திருநாள் நிகழ்வுகள்

**பின் வரும் நிகழ்வுகளைக் காண எதிரில் உள்ள லிங்கை லிக் செய்யவும்**

| |
|---|
| இறைவணக்கம், வரவேற்புரை |
| தலைமை உரை நீதியரசர் திரு.G.R. சுவாமிநாதன் அவர்கள் |
| ஆசியுரை சீர் வளர் சீர் நாராயண ஞான தேசிக சுவாமிகள் அவர்கள் |
| சிறப்புரை அருட்தந்தை திரு ஜகத் காஸ்பர் அவர்கள் |
| கருத்துரை முனைவர் திருப்பூர் கிருஷ்ணன் அவர்கள் |
| தனியுரை கோவை திரு அனந்தகிருட்டிணன் அவர்கள் |
| தனியுரை கம்பவாரிதி இலங்கை திரு ஜெயராஜ் அவர்கள் |

# தென் சபாநாயகர் கோயில் தரிசனம்

பங்குனி உத்திரத்தை முன்னிட்டு 24.03.2024 அன்று மாலை அருள்மிகு வள்ளி, தெய்வானை சமேத ஸ்ரீ ஆறுமுகப் பெருமானுக்கு சிறப்பான முறையில் அபிஷேக ஆராதனைகள் நடைபெற்றன. 25.03.2024 காலை ஸ்ரீதேவி, பூதேவி சமேத ஸ்ரீ கோவிந்தராஜப் பெருமாளுக்கு அபிஷேக ஆராதனைகளும் நடைபெற்றன.

**சித்திரை மாத வழிபாட்டு நிகழ்ச்சிகள்:**

| | | | |
|---|---|---|---|
| 16.04.2024 | வளர்பிறை அஷ்டமி | மாலை | வைரவர் வழிபாடு |
| 19.04.2024 | வளர்பிறை ஏகாதசி | மாலை | பெருமாள் வழிபாடு |
| 21.04.2024 | பிரதோஷம் | | |
| 27.04.2024 | சங்கடஹரசதுர்த்தி | மாலை | விநாயகர் வழிபாடு |
| 01.05.2024 | தேய்பிறை அஷ்டமி | காலை | வைரவர் வழிபாடு |
| 01.05.2024 | ஸ்ரீ ஆனந்த நடராஜர் மகா அபிஷேகம் | | |
| 05.05.2024 | பிரதோஷம் | | |

# ஒலிப்பேழை

## கம்ப வாரிதியின் பக்கம்



திருநெல்லை இதழில் மாதந்தோறும் கம்பவாரிதி இலங்கை திரு ஜெயராஜ் அவர்களிடம் வினாக்களை எழுப்பி அவ்வினாக்களுக்கு விடையை அவர்களின் குரல் வழியாகப் பெற்று திருநெல்லையில் பதிவிடுகிறோம்.

அவர்களிடத்தில் அன்பர்கள் கேட்ட வினாக்களும் அதற்கு அவர்கள் அளித்த விளக்கங்களும் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றைக் கேட்டுப் பயன்பெற வேண்டுகிறோம்.

**வினா 1** — விளக்கம்

தென்னாடுடைய சிவனே போற்றி என்றால் சிவன் தென்னாட்டிற்கு மட்டும் சொந்தமானவரா

**வினா 2** — விளக்கம்

இராவணன் குறித்து ஞானசம்பந்தர் பதிகங்களில் எட்டாவது பாடலில் வருவதால் அவனைச் சிறந்த சிவபக்தன் என்று கொள்ளலாமா. கம்ப இராமாயணத்தில் இராமன் ஆரியன் என்றும் இராவணன் திராவிடன் என்றும் ஆரியன் திராவிடனைக் கொன்றதால் கம்பனைத் திராவிடர்களுக்கு எதிரானவன் என்று சிலர் கூறுகிறார்களே

**வினா 3** — விளக்கம்

சைவத்தில் சரியை,கிரியை,யோகம்,ஞானம் என்ற நிலைகளையும் அவற்றின்வழி முக்தி அடைந்த நால்வர் குறித்தும் அடிப்படை விளக்கம் அளிக்க வேண்டுகிறோம்

# கோவிலூர் ஆண்டவர் நூலகம்

கோவிலூரில் அமைக்கப்பெற்றுள்ள "கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில்" சுமார் 40,000 நூல்கள் உள்ளன. நூல் விவர அட்டவணையைப் பதிவிறக்கம் செய்ய இங்கு சொடுக்கவும்.

# கோவிலூர் ஆண்டவர் இணைய நூலகம்

archive.org/details/@koviloor_andavar_library

INTERNET ARCHIVE

Koviloor Andavar Library

(no description yet)

UPLOADS LISTS POSTS REVIEWS COLLECTIONS WEB ARCHIVES

3,205 Results

Sort by: Weekly views Title Date archived Creator

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தங்கள்

தமிழ் மன்னன் கோனேரிராயன்

நெல்லைவருக்கக்கோவை

கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில் உள்ள நூல்கள் அனைத்தையும் கோவிலூர் ஆண்டவர் நூலகம் என்ற இணையதள நூலகத்தில் பதிவேற்றம் செய்து தமிழ்க் கொடையாக அளிக்க முடிவு செய்துள்ளோம்.

தற்போது சுமார் 3205 அரிய நூல்கள் இணைய நூலகத்தில் உள்ளன.

இப்போது நாள் ஒன்றுக்கு சுமார் 1000 பக்கங்களைப் புதிதாக இந்த நூலகத்தில் சேர்த்துக் கொண்டிருக்கிறோம். இந்த நூலகத்தில் உள்ள நூல்களை விலை இல்லாமல் படிக்கலாம்/ பதிவிறக்கம் செய்து கொள்ளலாம்.

இந்த நூலகத்தில் உள்ள நூல்களை விலை இல்லாமல் படிக்க / பதிவிறக்கம் செய்து கொள்ளலாம்.

கோவிலூர் ஆண்டவர் நூலகத்தில் உள்ள (பட்டியலில் காட்டப்பெற்றுள்ள) எந்த நூலாவது உங்களுக்கு தேவை என்றால் நூலகப் பொறுப்பாளர் திரு வெங்கடாசலம் அவர்களைத் (தொலைபேசி எண் 9442912649 என்பதில்) தொடர்பு கொள்ளவும். அந்த நூல் பதிப்புரிமைக்கு அப்பால் இருக்கும் நிலையில் அதை நம் இணைய நூலகத்தில் சேர்த்திட ஆவன செய்கிறோம். தாங்களும் அந்த நூலை உங்கள் வீட்டில் இருந்து இணையவழியாகப் படிக்கலாம். நூல் இணையத்தில் சேர்த்தபின் உங்களுக்குத் தகவல் தெரிவிக்கப்படும். நீங்கள் அந்த நூலை இணைய நூலகத்தில் படித்துக் கொள்ளலாம் அல்லது பதிவிறக்கம் செய்து கொள்ளலாம். இதற்கு எந்தக் கட்டணமும் இல்லை

இணைய நூலகத்தில் சென்ற மாதத்தில் மட்டும் சுமார் 150 நூல்கள் பதிவேற்றம் செய்யப்பட்டுள்ளன. மிகவும் அரிதான சில நூல்கள் இப்போது பதிவேற்றம் செய்யப்படுகின்றன.

இணைய நூலகத்தைப் பயன்படுத்துவோம். இறை தத்துவங்களை அறிவோம்.

# முந்தைய இதழ்களை படிக்க அந்தந்த லிங்கை கிளிக் செய்யவும்

திருநெல்லை – புரட்டாசி 

திருநெல்லை – ஐப்பசி 

திருநெல்லை – கார்த்திகை 

திருநெல்லை – மார்கழி 

திருநெல்லை – தை 

திருநெல்லை – மாசி 

தென்சபாநாயகர் கோவில் கட்டளைகளில் பங்கு கொள்ள விரும்புபவர்கள் 94433 35312 என்ற எண்ணை தொடர்பு கொள்ளவும்.



திருநெல்லை இணைய வழி திங்களிதழைப் பெற விரும்புபவர்கள் 94433 37011 என்ற எண்ணிற்கு வாட்சப்-பில் தொடர்பு கொள்ளவும்.



இணைய வழி தேவார இன்னிசை வகுப்பில் கலந்து கொள்ள விரும்புபவர்கள் 94433 35312 என்ற எண்ணை வாட்சப்-பில் தொடர்பு கொள்ளவும்.



திருநெல்லை இதழுக்கான ஆன்மிகப் படைப்புகள் வரவேற்கப்படுகிறன. திருநெல்லை (இணைய இதழ்), கோவிலூர் மடாலயம், கோவிலூர் என்ற முகவரிக்கு அஞ்சலிலோ அல்லது நேரிலோ தங்கள் ஆக்கங்களை அன்பர்கள் அளிக்கலாம்.



திருநெல்லை இணைய வழி மாத நாளிதழ் பற்றி தங்களுடைய மேலான கருத்துக்களை வாட்சப் எண். 94433 37011 மற்றும் koviloormadalayam@gmail.com என்ற மின்னஞ்சலுக்கு அனுப்பவும்.